# வைஷ்ணவ உலகுக்கு விசேஷ விருந்து

[ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்]

நேற்று ஐப்பசித்திங்களில் இங்கு நடந்த மணவாளமாமுனிகள் மஹோத்ஸவத்தில் ஸன்னிதியில் பத்துநாளும் மாமுனிகளின் ஸ்ரீஸூக்திவைபவத்தைப்பற்றி அடியேன் வழக்கம்போல் உபன்யாஸம் செய்துவந்தேன். அதில் ஒருநாள் விஞ்ஞாபித்தேன்—

ஆழ்வார்களில் திருமழிசைப்பிரான் தமதுதிருவந்தாதியில் *தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்கிற பாசுரத்தினால் தம்முடைய காலக்ஷேபப்ரகாரத்தைத் தெரிவித்தருளி யிருப்பது போல் மாமுனிகளும் தம்முடைய ஆர்த்தி ப்ரபந்தத்தில் "பண்டுபலவாரியரும் பாருலகோர் உய்யப் பரிவுடனேபணித்தருளும் பல்கலைகள் தம்மைக்கண்டதெல்லாம் எழுதியவை கற்றுணர்ந்துப் பிறர்க்குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்!" என்றும் "முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப்பெற்றோம் முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம், பின்னையொன்று தனில்நெஞ்சு பேராமல் பெற்றோம்" என்றும் தாம் அருளிச் செய்தபடியை அவர் தாம் அருளிச்செய்த வ்யாக்யானக்ரந்தங்கள் நன்குபுலப்படுத்துகின்றன வென்பதைவிளக்கி விஜ்ஞாபித்தேன், (அதாவது) மற்றைய ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களில் விசேஷமாகக் காணவியலாத அதிசயம் மாமுனிகளின் திவ்யக்ரந்தங்களில்மட்டும் காணத்தக்கதாக உள்ளது. முமுக்ஷுப்படிவ்யாக்யானம், தத்வத்ரய வ்யாக்யானம், ஸ்ரீவசனபூஷண வ்யாக்யானம், ஆசார்யஹ்ருதயவ்யாக்யானம் ஆகிய இந்நான்கு திவ்ய க்ரந்தங்களில் ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராண பாஞ்சராத்ரங்களிலிருந்துப் ஸித்தித்ரய—ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகா தத்வஸார சுகபக்ஷீயாதிகளிலிருந்தும் காவ்யாலங்கார க்ரந்தங்களிலிருந்தும் மேற்கோளாக ஸ்வாமி எடுத்துக்காட்டியுள்ள ஸம்ஸ்க்ருத ப்ரமாணவசனங்கள் (1778) ஆயிரத்தெழுநூற்றெழு பத்தெட்டு. தமிழ் மேற்கோள்களல்லாமல் வடமொழி மேற்கோள்கள் மட்டும் 1778 [ஆயிரத்தெழுநூற்றெழுபத்தெட்டு] இதை அடியேன்பதிப்பித்துள்ள ஸ்ரீமத்வரவரமுனீந்த்ரக்ரந்தமாலையில் விளக்கமாகவிவரித்திருக்கிறேன். [இங்கு நாம் 1778 என்று லக்கமிட்டதற்கு விவரணம் வருமாறு—முமுக்ஷுப்படி வியாக்கியானத்தில் உதாஹரிக்கப்பட்ட ப்ரமாணவசனங்கள் 189, தத்வத்ரயவ்யாக்யானத்தில் 542, ஸ்ரீவசனபூஷண வியா.–492; ஆசார்யஹ்ருதய வியா—555; ஆக 1778]

நேற்றைய மஹோத்ஸவத்தில் ஏழாம் திருநாளில் [28—10—73] திருவயிந்திரபுரத்தில் மஹோத்ஸவம் ஸேவிக்க விடைகொண்டிருந்தபோது அங்கு ஸ்ரீமதுபயவே. முதலியாண்டான் ஸ்வாமிகளின் தலைமையில் நடைபெற்ற உபன்யாஸ கோஷ்டியிலும் இந்த லக்கத்தை விவரித்து விஜ்ஞாபித்தேன். இங்கும் அங்கும் இதைக் கேட்ட பெரியார்கள் "இத்தனை ப்ரமாணங்களையும் பூர்ண சரீர நிர்த்தேசத்தோடும். ஆகரநிர்த்தேசத்தோடும் தேவரீர் அச்சிட்டு வெளியிட்டால் மிகப்பெரிய லோகோபகாரமாகுமே" என்றுரைத்தார்கள். அவ்வாணையை மாமுனிகளின் திவ்யாஜ்ஞையாகவே சிரமேற்கொண்டு அப்பணியை நிறைவேற்ற இதோ ஆரம்பித்துவிட்டேன். அந்த ஆயிரத்தெழுநூற்றெழுபத்தெட்டு ப்ரமாணவசனங்களையும் ஏற்கனவே அகராதிவரிசைப்படுத்தி யிருந்தபடியால் இப்போது அதிக ச்ரமமில்லாமல் இத்தொண்டு செய்ய முன்வந்தேன். நாலாயிர வ்யாக்யானங்கள்

முதலான வற்றிலுள்ள ப்ரமாணங்களைத் தொடாமல் மாமுனிகளின் வ்யாக்யானங்களில் உதாஹரித்துள்ள ஸம்ஸ்க்ருதப்ரமாணங்களை மட்டுமே அகராதி வரிசையில் பூர்த்தியான சரீரத்துடனும் ஆகரக் குறிப்புடனும் இதோ வெளியிடுகிறேன். இதற்குப் பொழிப்புரையும் அவச்யமேயாகும். ஆனால் அதை அடுத்த பணியாக வைத்துக் கொள்வேன். இந்த ப்ரமாணத்திரட்டை க்ரந்த லிபியிலோ தெலுங்கு லிபியிலோ தேவநாகரி லிபியிலோ அச்சிட்டால் அக்ஷரங்களின் உச்சாரணத்திற்கு மிகவும் ஸௌகர்யமாகும். ஆயினும் அந்த லிபிகளில் ப்ரவேசம் இல்லாதவர்களும் தமிழ் லிபி மட்டுமே தெரிந்தவர்களுமான ஸம்ப்ரதாய ரஸிகர்கள் மலிந்திருப்பதனாலும் அன்னவர்களின் வேண்டுகோளினாலும் இப்போது இங்ஙனே அச்சிடலாகிறது. தெலுங்கு லிபியிலும் தேவநாகர லிபியிலும் இதை இப்போதே அச்சிடத் தொடங்கிவிட்டேன். அவை சித்திரை வைகாசியில் வெளிவந்துவிடும். இந்த தமிழ்ப் பிரசுரம் நாளது பங்குனிவிசாகத்தில் முடிவு பெற்று வெளிவரும். இந்த மனோரதங்களின் பூர்த்தியையும் இதற்குரிய ஆயுராரோக்ய பலங்களையும் பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் ஆழ்வார் ஆசார்யர்களும் ஐங்கமஸ்ரீ விமானங்களும் அளித்தருளவேணும்.

# ஸ்ரீமத்வரவரமுநீந்த்ர க்ரந்தோதாஹ்ருத ப்ரமாணாநுக்ரமணிகா

(மணவாள மாமுனிகள் அருளிச்செய்த ரஹஸ்ய வ்யாக்யானங்கள் நான்கில் உதாஹரிக்கப்பட்ட ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களின் அட்டவணை)

(ப்ரமாணங்களின் பூர்ண சரீரமும் ஆகரமும்)

1 அ இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதாநமபிததா கிம் நாம மங்கலம் ந க்ருதம்? (வையாகரணர்)

2 அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி:, வேதத்ரயாந்நிரப்ருஹத் பூர் புவஸ்ஸ்வரிதீதி ச. (மநுஸ்ம்ருதி 2-76)

3 அகார: சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர் வாசக இஷ்யதே, உகாரச்சித்ஸ்வரூபாயா: ச்ரியோ வாசீ ததா விது:. மகாரஸ்து தயோர் தாஸ இதி ப்ரணவலக்ஷணம். (பகவச்சாஸ்த்ரம்)

4 அகாரேணோச்யதே விஷ்ணு: ஸர்வலோகேச்வரோ ஹரி:, உத்த்ருதா விஷ்ணுநா லக்ஷ்மீ: உகாரேணோச்யதே ஸதா. மகாரஸ்து தயோர் விப்ர ஸ்ரீநாராயணயோஸ் ஸதா; ஆத்மந: சேஷபூதஸ்ய வாசக: ச்ருதி சோதித:. (பாஞ்சராத்ரம்)

5 அகாரோ வை ஸர்வா வாக் (தைத்திரீயோபநிஷத், நாராயணாநுவாகம் 12-3)

6 அகார்யசிந்தா ஸமகாலமேவ ப்ராதுர்ப்பவந் சாபதர: புரஸ்தாத், அந்த: சரீரேஷ்வபி ய: ப்ரஜாநாம் ப்ரத்யாதிதேசா விநயம் விநேதா.(ரகுவம்சம் 6-40)

7 அகாலபலிநோ வ்ருக்ஷாஸ் ஸர்வே சாபி மதுஸ்ரவா:, பவந்து மார்கே பகவந் அயோத்யாம் ப்ரதி கச்சத:. (ராமா. யு. 127, 19.)

8 அகிஞ்சநோகதி:—அஹமஸ்ம்யபராதாநாம் ஆலயோகிஞ்சநோகதி:, த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநா மதி:, சரணாகதிரித்யுக்தா ஸா தேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம். (அஹிர்புத்ந்ய ஸம்ஹிதா 37-30, 31)

9 அகிஞ்சநோநந்யகதி:—ந தர்மநிஷ்ட்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாந் த்வச்சரணாரவிந்தே, அகிஞ்சந: அநந்யகதி: சரண்ய த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே. (ஸ்தோத்ரரத்னம்-22)

பக்த்யேகலப்ய: புருஷோத்தமோஸௌ ஜகத் ப்ரஸூதிஸ்த்திநாசஹேது:, அகிஞ்சநோநந்யகதி: சரண்ய க்ருஹாண மாம் க்லேசிநம் அம்புஜாக்ஷ! (ஜிதந்தா 2-15)

10 அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி: (ஸ்ரீபாஷ்யகாரரின் முக்தகவாக்யம்)

11 அக்ருத்ரிம த்வச் சரணாரவிந்த ப்ரேமப்ரகர்ஷாவதி மாத்மவந்தம், பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தம் அசிந்தயித்வா. (ஸ்தோத்ர ரத்னம் ச்லோ. 65)

12 அகில ஜகந்மாதரம்— பகவந்நாராயணபிமதாநுரூப ஸ்வரூபரூப குண விபவைச்வர்ய சீலாத்யநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகணாம் பத்மவநாலயாம் பகவதீம் ச்ரியம் தேவீம் நித்யாநபாயிநீம் நிரவத்யாம் தேவதேவ திவ்ய மஹிஷீம் அகில ஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அசரண்ய சரண்யாம் அநந்யசரண: சரணமஹம் ப்ரபத்யே. (சரணாகதி கத்யம்)

13 அகில புவந ஜந்மஸ்த்தேம பங்காதிலீலே விநத விவித பூதவ்ராத ரக்ஷைக தீக்ஷே, ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா. (ஸ்ரீபாஷ்யமங்களச்லோகம்)

14 அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாந ஸ்வேதர ஸமஸ்தவஸ்து விலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூப! (சரணாகதி கத்யம்)

15 அக்நிப்ரவேசம் யச்சாபி குருதே மத்கதாத்மநா, ஸ யாத்யக்நிப்ரகாசேந விமாநேந மமாலயம். ப்ராணாந் த்யஜதி யோ மர்த்யோ மாம் ப்ரபந்நோப்யநாசகம், பாலஸூர்யப்ரகாசேந வ்ரஜேத்யாநேந மத்க்ருஹம். (ஆச்வமேதிக பர்வம் [வைஷ்ணவ தர்ம சாஸ்த்ரம்] ஐந்தாமத்யாயம்)

16 அக்நிர் வாக்பூத்வா முகம் ப்ராவிசத், ஆதித்ய: சக்ஷுர் பூத்வா அக்ஷிணீ ப்ராவிசத், வாயுர் க்ராணோ பூத்வா நாஸிகே ப்ராவிசத், திச: ச்ரோத்ரம் பூத்வா கர்ணௌ ப்ராவிசந், ஓஷதிவநஸ்பதயோ லோமாநி பூத்வா த்வசம் ப்ராவிசந் சந்த்ரமா மநோ பூத்வா ஹ்ருதயம் ப்ராவிசத், ம்ருத்யுரபாநோ பூத்வா நாபிம் ப்ராவிசத், ஆபோ ரேதோ பூத்வா சிச்நம் ப்ராவிசந் (ஐதரேயோபநிஷத் 1-2-4)

17 அக்நிம் வாவாதித்யஸ் ஸாயம் ப்ரவிசதி, தஸ்மாத் அக்நி: தூராந்நக்தம் தத்ருசே, உபே ஹி தேஜஸீ ஸம்பத்யேதே (தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணம் 2)

18 அக்நீஷோமீயம் பசுமாலபேத. (யஜு-அஷ்டகம்3; ப்ரச்நம் 5)

19 அக்நே ரௌஷ்ண்யம் ப்ரகாசத்வம் ரூபேந்த்ரிய மமர்ஷணம், ஸந்தாப சௌர்ய தைக்ஷ்ண்யாதிவர்ணம் பசநசக்திதாம். ஆதத்தே ஸஹஸா தேஹ: ஸாஹஸஞ்ச த்விஜர்ஷப. ( ? )

20 அக்நே: சிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம், ராஜஸேஷு ச மாஹாத்ம்யம் அதிகம் ப்ரஹ்மணோ விது:, ஸாத்விகேஷு அத கல்பேஷு

மாஹாத்ம்யம் அதிகம் ஹரே:, தேஷ்வேவ யோக ஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராம் கதிம். ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ருணாஞ்ச நிகத்யதே.
(மத்ஸ்யபுராணம் -53-68)

21 அக்ரதஸ் தே கமிஷ்யாமி—யதி த்வம் ப்ரஸ்த்திதோ துர்க்கம் வந மத்யைவ ராகவ, **அக்ரதஸ் தே கமிஷ்யாமி** ம்ருத்நந்தீ குசகண்டகாந். (ராமா.அயோ.27-6)

22 அக்ரத: ப்ரயயௌ ராம: ஸீதா மத்யே ஸுமத்யமா, ப்ருஷ்ட்டதஸ் து தநுஷ் பாணி: லக்ஷ்மணோ நுஜகாம ஹ. (ராமா. ஆரண்ய 11-1)

23 அங்கே பரதமாரோப்ய—தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்த்த: சிரஸ்யாக்ஷிபதம் கதம், **அங்கே பரதமாரோப்ய** முதித: பரிஷஸ்வஜே. (ஸ்ரீராமா.யுத்த 130-38)

24 அங்கநா மங்கநாமந்தரே மாதவோ மாதவம் மாதவஞ்சாந்தரேணாங்கநா, இத்தமாகல்பிதே மண்டலே மத்யக: ஸஞ்ஜகௌ வேணுநா தேவகீநந்தந:.
(கர்ணாம்ருதம்)

25 அங்காநி வேதா: சத்வார: மீமாம்ஸா ந்யாயவிஸ்தர:, புராணம் தர்ம சாஸ்த்ரஞ்ச வித்யா ஹ்யேதா: சதுர்தச. (ஸ்ரீ விஷ்ணுபுராணம் 3-6-28)

26 அங்காந்யந்யா தேவதா:—ஸ ஆத்மா; அங்காந்யந்யா தேவதா:
(தைத்திரீய உபநிஷத், சீக்ஷாவல்லீ)

27 அங்குஷ்ட்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்ட்டதி, ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே, அங்குஷ்ட்டமாத்ர: புருஷோ ஜ்யோதிரிவாதூமக:, ஈசாநோ பூத பவ்யஸ்ய ஸ ஏவாத்ய ஸ உ ச்வ:. (கடோ 2-4-12,13)

28 அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத: கரண களேபரைர் கடயிதும் தயமாந மநா:. வரத! நிஜேச்சயைவ பரவாநகரோ: ப்ரக்ருதிம் மஹதபிமாந பூத கரணாவலிகோரகிணீம். (ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தரசதகம் 41)

29 அசிந்த்யாத்புதாக்லிஷ்ட—நமோசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாந வைராக்ய ராசயே, நாதாய முநயேகாத பகவத் பக்தி ஸிந்தவே. (ஸ்தோத்ரரத்னம் 1)

30 அசேதநா பரார்த்தா ச நித்யா ஸததவிக்ரியா, த்ரிகுணா கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூப முச்யதே. வ்யாப்திரூபேண ஸம்பந்தஸ் தஸ்யாச்ச புருஷஸ்ய ச, ஸ ஹ்யநாதி ரநந்தச் ச பரமார்த்தேந நிச்சித: (பரமஸம்ஹிதை 2)

31 அச்சேத்யோயம் அதாஹ்யோயம் அக்லேத்ய: அசோஷ்ய ஏவ ச, நித்ய: ஸர்வகதஸ் ஸ்த்தாணு: அசலோயம் ஸநாதந: (பகவத் கீதை 2-24)

32 அச்யுத பக்திதத்வ—பூயோ **நமோபரிமிதாச்யுத** பக்திதத்வ ஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹ சுபைர் வசோபி:, லோகேவதீர்ண பரமார்த்த ஸமக்ர பக்தி யோகாய நாதமுநயே யமிநாம் வராய. (ஸ்தோத்ர ரத்னம் 3)

---

**குறிப்பு:—** இந்த ஒரு form மட்டும் ஸ்ரீராமாநுஜனில் ஆதர்சரூபமாக (sample) வெளியிடப்படுகிறது. மேற்கொண்டு இதில் வெளிவராது. (ஏறக்குறைய 250 பக்கங்கள் கொண்ட தனிப் புத்தகமாகப் பங்குனி மாதத்தில் கிடைக்கும். அன்பர்களின் பொருளுதவி இதற்கு அத்யாவச்யகமானது.

# ஸ்ரீ ராமாநுஜன் 303



ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 26 | ப்ரமாதீசஸ்ரீ கார்த்திகைமீ | ஸஞ்சிகை 3 |
|---|---|---|


## கார்த்திகைத் திங்களுக்குக் கலிகன்றிகள் இருவரால் பெருமை

(முதல் கலிகன்றியாவார் "மஞ்சுலாஞ்சோலை வண்டறைமாநீர் மங்கையார் வாட்கலிகன்றி" என்ற திருமங்கையாழ்வாராவார். இரண்டாம் கலிகன்றியாவார் கலிகன்றிதாஸரென்று நஞ்சீயரால் திருநாமஞ் சாத்தப்பெற்ற நம்பிள்ளையாவார்.)

## திருமங்கையாழ்வார் வைபவச் சுருக்கம்

கலியன், கலிகன்றி, குறையல்பிரான், வாள்வீசும்பரகாலன், ஆடல்மாவலவன், ஆலிநாடன், மங்கைவேந்தன், மங்கையர்கோன், திருமங்கையாழ்வார் என்றிவை முதலான பல திருநாமங்கள் இவர்க்குள்ளன. திருவாலி திருநகரியைச் சார்ந்த திருக்குறையலூரில் கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நன்னாளில் இவரது திருவவதாரம். *மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூறவவதரித்த* என்ற உபதேசரத்தினமாலையின் படியும், "வேத சதுஷ்டய அங்கோபாங்கங்கள் பதினாலும்போலே இந்நாலுக்கும் இருந்தமிழ் நூற்புலவர் பனுவலாறும் மற்றை யெண்மர் நன்மாலைகளும்" என்ற ஆசார்யஹ்ருதய (43) சூர்ணையின்படியும் அறிய வேண்டிய விசேஷமொன்றுண்டு.

வடமொழி வேதத்திற்கு அங்கங்களும் உபாங்கங்களும் இருப்பதுபோல தமிழ் வேதத்திற்கும் அவையுள்ளன; ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்கிற நான்கு வேதங்களுக்கும் சீக்ஷா வ்யாகரணம் ச்சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்கிற ஆறு அங்கங்களும் மீமாம்ஸா ந்யாய புராண தர்மசாஸ்த்ரங்கள் முதலிய உபாங்கங்கள் எட்டும் ஆகப் பதினான்கு உறுப்புக்கள் அமைந்திருப்பது போலவே, நம்மாழ்வாரருளிச் செய்த திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி ஆகிய தமிழ்மறை நான்கிற்கும் இத் திருமங்கையாழ்வாருடைய திவ்வியப் பிரபந்தங்களாறும் மற்றையாழ்வார்கள் எண்மருடைய திவ்வியப் பிரபந்தங்களும் அங்கோபாங்கங்களாமென்று ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான பூருவாசாரியர்கள் அறுதியிட்டனர். இவ்வாழ்வாருடைய பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் ஆகிய ஆறு பிரபந்தங்களும் ஆறு அங்கமாகக் கொள்ளப்பட்டன. வடமொழி வேதங்களுக்கு சீக்ஷா வ்யாகரணம் நிருக்தம் முதலியவை அங்கமாகுந் தன்மையை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ***சீக்ஷாயாம் வர்ணசிக்ஷா பதஸமதிகமோ வ்யாக்ரியா நிர்வசோப்யாம்*** இத்யாதி ச்லோகத்தினால் நிரூபித்துக் காட்டியிருப்பது போல நம்மாழ்வாருடைய தமிழ்மறைகளுக்கும் இவ்வாழ்வாருடைய ஆறு பிரபந்தங்களும் அங்கமாகுந்தன்மையை நிரூபித்துக் காட்ட வேண்டாவோ வென்னில்; கேண்மின்;

அங்காங்கிபாவஸமந்வயம் பலபடிகளால் பொருந்தும். வடமொழி வேதங்களுக்கும் சீக்ஷாதிகளுக்கும் அங்காங்கிபாவம் எவ்விதமாகப் பொருந்தியிருக்கின்றதோ அவ்விதமாகவே இங்கும் பொருந்தவேணு மென்கிற நிர்பந்தமில்லை. நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தைப் பெரும்பாலும் பின்பற்றியே இவ்வாழ்வார் அருளிச்செய்துள்ளார் என்பதுவே இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கது; இதையிட்டே ''மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற'' என்றது. அதனை ஸ்ரீ ராமாநுஜனிலேயே வெளிவந்துகொண்டிருக்கிற ''அபூர்வார்த்த ரத்னநிதி''யில் மகர வரிசையில் ''மாறன் பணித்த'' என்ற மகுடத்தின் கீழ்க்காண்க.

# நம்பிள்ளை வைபவச் சுருக்கம்

நஞ்சீயருடைய திருவடிகளிலே ஆச்ரயித்தவர்களில் தலைவர் நம்பிள்ளை. இவர்க்கு இயற்கையான திருநாமம் 'நம்பூர் வரதராஜாரர்யர்' என்பது. ஸ்வாசார்யரான நஞ்சீயர் உகந்து சாத்தின திருநாமம் நம்பிள்ளை யென்பது. அந்தத் திருநாமம் சாத்துகைக்கு அடியென்னென்னில்; நஞ்சீயர் பட்டருடைய நியமனப்படி திருவாய்மொழியின் திவ்யார்த்தங்களை ப்ரவசனஞ் செய்வதையே போது போக்காகக் கொண்டு வாழ்ந்து வந்தார் திருவரங்கம் பெரிய கோயிலில். அவருடைய காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்தவர்களில் நம்பூர் வரதராஜார்யரும் ஒருவராயிருந்துவந்தார். இவர் நீறுபூத்த நெருப்புப்போல இருந்து வந்தபடியாலே இவருடைய ஞான வைபவம் முதலிய பெருமைகளை விசேஷித்து யாரும் அறியாதிருந்தனர்.

இப்படியிருக்கையில், நஞ்சீயர் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய ஆறாயிரப்படியிற்காட்டிலும் சிறிது விரிவாக வொரு வியாக்கியானமிடும்படி பட்டருடைய நியமனம் பெற்றிருந்ததனால் ஒன்பதினாயிரப்படியென்றொரு வியாக்கியானம் இட்டருளியிருந்தார். அதைச் செவ்வையாகப் பட்டோலை கொள்ள வல்லாரிடம் கொடுத்து எழுதுவிக்க வேணுமென்று கருதி இதற்குத் தகுந்தவர்கள் யாரேனுமுளரோ வென்று அந்தரங்கர்களை விசாரிக்கையில் 'நம்பூர் வரதராஜார்யரென்றொருவர் ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டிக்குத் தவறாது வருகின்றாரே; அவர் நல்ல விரகர்; எழுத்திலும் வல்லவர். அவரைக்கொண்டு இப்பணியை நிறைவேற்றிக் கொள்ளலாம்' என்று கூறினார்கள். பிறகு அவரை அருகே வரவழைத்து ஆராய்ந்து பார்க்கையில் அவருடைய பாண்டித்யம் ஒப்புயர்வற்றதென்று தெரிய வந்தது; அதனால் உள்ளம் பூரித்து அவர்பால் விசேஷ கடாக்ஷம் செய்தருளித் தம்முடைய ஒன்பதினாயிரப்படியை வரியடைவே அவர்க்கு ப்ரவசனமும் செய்து அதை யெழுதித் தரும்படி ஸ்ரீகோசத்தை அவரிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்டவர் தம்மூருக்குச் சென்று எழுதிக் கொண்டு வருவதாகச் சொல்லிப் போகையில் திருக்காவேரியில் நீந்திச் செல்ல நேர்ந்தது; அப்போது திருமுடியில் கட்டிக்கொண்ட அந்த ஸ்ரீகோசம் நெகிழ்ந்து விழுந்து வெள்ளத்திற்போய்விடவே 'இப்படி அபசாரமாய்த் தலைக்கட்டிற்றே' யென்று வருந்த நேர்ந்தது. ஆனாலும் இவர் தாம் அந்த வ்யாக்யானத்தை ஸ்வாசார்யர் திருவடிகளிலே வரியடைவே கற்றிருந்தபடியாலும் அவருடைய கருணை கடாக்ஷத்தை விசேஷித்துப் பெற்றிருந்த படியாலும் அவருடைய திருவடிகளைச் சிந்தித்துக் கொண்டே பட்டோலை கொள்ளத் தொடங்கி விரைவில் எழுதி முடித்து ஸ்ரீகோசத்தை நஞ்சீயர் திருவடிகளிலே கொண்டு வைத்தார். 'நாம் கொடுத்த ஏடு எங்கே?' என்று அவர் கேட்கையில், நடந்தது நடந்தபடியே விண்ணப்பஞ்செய்ய வேண்டியதாயிற்று. பிறகு நஞ்சீயர் ஸ்ரீகோசத்தை அவிழ்த்துக் கடாக்ஷிக்கையில், தாமருளிச் செய்த ஸ்ரீஸூக்திகள் விடாமலும் தம்மிடம் அவர் கேட்டிருந்த சில அர்த்த விசேஷங்கள் பொருத்தமாக அமைந்தும் அதிகவிரிவில்லாமலும் இருந்த அழகுக்கு மிகவுகந்து 'வாரீர் நம்முடைய பிள்ளையே!' என்று எடுத்தணைத்துக் கொண்டார். அதுமுதலாக நம்பிள்ளை யென்றே இவர் வழங்கப் பெற்று வந்தார். திருக்கலிகன்றிதாஸர் என்பதும் இவர்க்கு நஞ்சீயர் சாத்தின திருநாமம்.

இவருடைய ஞான வைபவத்தைப் பற்றி நாம் விரிவாக எழுத வேண்டுமோ? பெரிய திருமொழி வ்யாக்யானத்தில் *ஓதுவாய்மையு முவனியப் பிறப்பு முனக்கு முன் தந்த அந்தணனொருவன்* என்ற விடத்து "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்துப் பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளுமதிகரித்து, போதுபோக்கும் அருளிச் செயலிலேயாம் நம்பிள்ளையைப் போலே" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தி யொன்றே இவருடைய ஞானப்பெருமையை விளக்கக் கூடியது. திவ்யப்ரபந்தங்களுக்கும் இதிஹாஸ புராணாதிகளுக்கும் ஆழ்ந்து இன்சுவையே வடிவெடுத்த அர்த்தங்களை யருளிச் செய்வதில் இவர்க்கு ஒத்தாரும் மிக்காருமில்லை.

லோகாசார்யரென்கிற திருநாமமும் இவர்க்கு உண்டு. அது பற்றிய வரலாறு கேண்மின்; இவர் கோயிலில் வாழ்ந்த காலத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இவர் திருவடிகளிலே ஆச்ரயித்து ஸகலார்த்தங்களும் கேட்டு வந்தார்கள். 'நம்பெருமாள் கோஷ்டியோ நம்பிள்ளை கோஷ்டியோ' என்னும்படி மிகப்பெரிய சிஷ்ய கோஷ்டி ஸம்பத்துடன் வாழ்ந்து வந்தார். அப்போது முதலியாண்டான் திருப்பேரனான கந்தாடைத் தோழப்பரும் அங்கு வாழ்ந்து வந்தார். அவரும் வித்வானாயிருக்கச் செய்தேயும் அவரிடத்தில் ஒருவரும் ஆச்ரயியாதிருக்கவே அவர்க்குப் பொறாமையுண்டாகி ஒரு நாள் நம்பிள்ளையைப் பெருமாள் கோஷ்டியிலே திரஸ்காரமான வார்த்தைகளைச் சொல்லிப் பரிபவித்துவிட்டுத் திருமாளிகைக் கெழுந்தருளினார். அவருடைய தேவிகள் இந்த அஸஹ்யாபசாரத்தை யறிந்து கண்ணுங் கண்ணீருமாக வந்து 'அந்தோ! இப்படியும் பரமாசார்யர் திருவடிகளிலே அபசாரப்படுவீரோ? உமக்கு உய்யும் விரகுண்டோ? என் செய்தீர்! என் செய்தீர்! ஐயோ!' என்று பலவுஞ்சொல்லி அநுதாபத்தை யுண்டாக்க, தோழப்பரும் அநுதபித்து நம்பிள்ளை திருவடிகளில் க்ஷமை வேண்ட வேணுமென்று பாரித்திருக்க, அகற்குள்ளே நம்பிள்ளை தாமே தோழப்பருடைய திருமாளிகையேற வந்திருந்து வேரற்ற மரம்போலே விழுந்து தெண்டனிட்டு, தேவரீருடைய திருவுள்ளம் கன்றும்படி வார்த்தித்த அடியேனுக்கு தேவரீருடைய க்ஷமையல்லது புகலில்லை யென்று பலவுமருளிச் செய்து க்ஷாமணம் பண்ணிக் கொண்டார். அப்போது தோழப்பர் அந்த மஹா குணத்திற்கு வியந்து "ஸ்வாமிந்! தேவரீரை இத்தனை நாளும் சிறிது பேர்களுக்கு ஆசார்யராக எண்ணியிருந்தேன்; இப்போது லோகத்துக்கெல்லாம் ஆசார்யர் தேவரீர் என்று திண்ணமாகக் கொண்டேன்" என்றார். அது முதலாக நம்பிள்ளைக்கு லோகாசார்ய ரென்று திருநாமம் வழங்கி வந்தது; "துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர் தம் முகப்பால். என்னவுலகாரியனோ வென்றுரைக்க, பின்னை யுலகாரியனெனும் பேர் நம்பிள்ளைக்கோங்கி, விலகாமல் நின்றதென்றும் மேல்" என்ற உபதேசரத்தின மாலைப் பாசுரம் இங்கே அநுஸந்திக்கத்தகும்.

நம்பிள்ளை திருவடிகளில் பலர் ஆச்ரயித்திருந்தாலும் பின்பழகிய பெருமாள் ஜீயர்க்கு இருந்த ஆசார்ய பக்தி ஒப்பற்றதென்று தெரிகிறது; உபதேச ரத்தின மாலையில் "பின்பழகராம் பெருமாள் சீயர் பெருந்திவத்தில் அன்பதுவுமற்று மிக்க வாசையினால்—நம்பிள்ளைக்கான வடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே! ஊனமற வெப்பொழுது மோர்" என்று விசேஷித்து அருளிச் செய்கையாலே.

இப்பேராசிரியரின் திருவடிகளில் பணிந்து அல்லும் பகலும் ஸகலார்த்தங்களையுங் கேட்டுத் தரித்த வடக்குத் திருவீதிப்பிள்ளையும் பெரிய வாச்சான் பிள்ளையும் உலகுக்குச் செய்திருக்குமுபகாரம் கைம்மாறற்றது.

## பகவத் விஷயப் பதிப்பு பற்றின விஜ்ஞாபனம்

ஏற்கனவே தெரிவித்திருந்தபடி நேற்றைய விஜயதசமியன்று பகவத் விஷயப் பதிப்பு தொடங்க இயலவில்லை. முக்கியமான காரணம் ப்ரிண்டிங் பேப்பர் (Printing Paper) தற்காலம் துர்லபமாயிருப்பதே. காகிதத்தின் விலை நாள்தோறும், நாழிகை தோறும் ஏறிக்கொண்டே வருகிறது. நல்ல காகிதமாகக் கிடைப்பதும் அரிதாயிருக்கிறது. ஆனாலும் மொத்தமாக 100 ரீம் (Ream) வாங்கி வைத்துக்கொள்ள ப்ரபல முயற்சிகள் செய்து வருகிறோம். நாளது கார்த்திகை மாதத்திலேயே அச்சு ஆரம்பிக்க உத்தேசித்துள்ளது. தவறினால் தை மாதத் தொடக்கத்தில் ஆரம்பித்தாகும்.

இப்படிக்கு,
**தி. அ. அனந்தாழ்வான்.**



## ஸ்ரீகாஞ்சீ. நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடனபத்ரிகை

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகைமீ 14உ (29—11—73) வியாழக்கிழமை திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 23உ (8—12—73) சனிக்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்ரத்தில் சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்துவரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தல வசதி முதலிய ஸௌகர்யங்கள் விசேஷமாகச் செய்துகொடுக்கப்படும். ஸ்ரீ வைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

சாற்றுமுறையன்று காலை 10-30 மணிக்கு ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து ஸேவை சாற்றுமுறைகள் நடைபெறும். இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்று வருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருள் உதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம் மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இங்ஙனம்,
P. B. ANNANGARACHARYA,
Founder, Sri Nampillai Sannidhi.

காஞ்சீபுரம்-3.
20—11—73

## பகவத்விஷயப் பதிப்புக்கு நன்கொடை யளித்தவர்கள்

ஏற்கனவே ஸ்ரீராமாநுஜன் 300ல் சில திருநாமங்களைத் தெரிவித்துள்ளோம். அதன் பிறகு வரவுகள்.

| | | |
|---|---|---|
| ஸ்ரீமான். | உ. வே. K. A. தேவராஜன் (Bhopal) ... ... | 200—00 |
| ,, | R. ஸ்ரீநிவாஸய்யங்கார் (நேமத்தான்பட்டி) ... ... | 200—00 |
| ,, | P. B. ஸம்பத் ஐயங்கார் (Madras) ... ... | 101—00 |
| ,, | A. K. சடகோபாசாரியர் (Founder, Divine Scicne Trust) | 111—00 |
| ,, | Dr. K. சௌரிராஜன், M.B.B.S. (Madras-35) ... | 100—00 |
| ,, | S. துரைசாமி ஐயங்கார் பெங்களூர் ... ... | 101—00 |
| ,, | K. ரங்கராகவன், (Madras) ... ... ... | 101—00 |
| ,, | T. A. திருவேங்கடாசார்யர், மூலம் (New Delhi) ... | 100—00 |
| ,, | M. ரங்கசாமி ஐயங்கார், (V. Perumal Chetty & Sons) ... | 100—00 |
| ,, | உ. வே. V. S. R. சக்ரவர்த்தி ஐயங்கார் (Madras-20) ... | 240—00 |
| | (ஏற்கனவே அளித்த ரூ. 200 தவிர) | |

# (கடிதம்)

# ஸந்தோஷகரமான ஸமாதான வார்த்தைகள்

(உபய வேதாந்த வித்வான்
எம்பார். வட்டமணி ஸ்ரீநிவாஸாசாரியர், திருநாங்கூர்)

ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையை மாதந்தோறும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்து பெற்று—நிதிபெற்றுப்போல் பெற்று—வாசித்து வருகிற நான் ஸந்தோஷமுள்ளடங்காமல் இக்கட்டுரையை எழுதி ஸ்வாமி ஸன்னிதியில் ஸமர்ப்பிக்கிறேன். ஸமீப காலத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் நடந்த (ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி நடத்தி வைத்த) வித்வத் பரிஷத்தில் தேவரீருக்கும் மதுராந்தக வித்வானுக்கும் நடந்த ஸம்பாஷணையை ஸ்ரீ ராமாநுஜன் 300, 301 ஆகிய இரண்டு இதழ்களில் வாசித்து உண்மையில் உள்ளடங்காத ஆனந்தமடைந்தேன். நேற்றைய மணவாளமாமுனிகளுத்ஸவத்தில் வண்புருடோத்தமன் ஸன்னிதியில் நடந்த உபந்யாஸ கோஷ்டியில் அந்த வினு விடைகளை அடியேன் ஸாரமாக எடுத்துரைத்து விண்ணப்பம் செய்தேன். அதைப் பல ஸ்வாமிகள் கேட்டுப் பரமானந்தம் அடைந்தார்கள். தேவரீர் 18, 20 பக்கங்களில் எழுதியிருந்த ஸம்பாஷணையை அடியேன் ஸங்க்ரஹித்து உபந்யஸித்தபடி 5, 6 பக்கங்களில் சுருக்கி எழுதி யனுப்பும் இந்த வியாசத்தை உபேக்ஷியாமல் அடுத்த ஸ்ரீ ராமாநுஜனில் வெளியிட்டருளும்படி ப்ரார்த்திக்கிறேன். இதனுல் அடியேன் ஒரு பெருமைபெற விரும்பவில்லை. இதுவும் லோகோபகாரகம் ஆகும் என்று அத்யவஸிக்கிறேன்.

"எம்பெருமான் பக்கலில் நாம் ரக்ஷை பெறுவதற்கு எது ஸாதநம் என்பதை நிஷ்கர்ஷித்து ஸாதிக்கலாமா? என்கிற தேவரீருடைய வினுவிற்கு மதுராந்தகர் "அடியேன் நீண்ட காலமாக நம்முடைய க்ரியா கலாபங்கள்தான் எம்பெருமான் செய்யும் ரக்ஷைக்கு ஹேது என்றிருந்தேன். *த்ராணே ஸ்வாமித்வ ஸௌசித்யம் ந்யாஸா த்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாநஹேது: ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணு விபோ:* என்கிற ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார காரிகையை தேவரீர் எடுத்துக் காட்டி விபுல விவரணமும் செய்திருப்பதை நடுநிலை நின்று ஆராய்ந்த பிறகு அந்த எண்ணத்தை முற்றிலும் மாற்றிக்கொண்டேன். இந்தக் காரிகையில் 'த்ராணே—ப்ரதாந ஹேது: விபோ: கருணு' என்று ஸாதித்தார் ஸ்வாமி தேசிகன். இப்படிச் சொன்னுல் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமே, வைஷம்யவாதம் தலையெடுக்குமேயென்று முசித்திருந்தேன். அந்தக் கருணைக்கு 'ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா' என்று விசேஷணமிட்டிருப்பதை தேவரீர் எடுத்துக்காட்டி மாசறுத்திருக்கிறதே. 'பட்டத்துக்குரிய ஆனையுமரசும் செய்யுமவை ஆராயாது' என்கிற ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தியைத் தழுவியே தேசிகன் இது அருளிச் செய்தாரென்பதில் விஸம்வாதம் கொள்வது விவேகிகளின் பணியன்றே" என்று (அவர்) விடையிறுத்தது மிகவும் ஸமஞ்ஜஸமானது.

2. அதற்கு மேல் தேவரீர் "இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணீம்?" என்கிற நியாய ஸித்தாஞ்ஜன காரிகைக்கு ரங்கராமாநுஜ ஸ்வாமியிட்ட வியாக்கியானத்தைத் தள்ளித் திருப்புட்குழி ஸ்வாமி தமது ரத்நபேடிகை என்கிற வியாக்கியானத்தில் ஆகாச தாண்டவமாடியிருப்பதை கடாக்ஷித்திருக்கிறதோ?" என்றுவினவியதற்கு மதுராந்தகர் "ஆகாச தாண்டவமென்று சொல்லுவதிற்காட்டிலும் வேறொரு விதமாகச் சொல்லலாமென்று அடியேன் நினைக்கிறேன். அதாவது தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்த தெல்லாம் ஸாதிக்க வல்லமையுள்ளதாக' ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸாதித்திருப்பதை ஸார்த்தகமாக்கினதாகக் கொள்ளலாம்" என்று (அவர்) விடையிறுத்தது மிகவும் ப்ராமாணிகமானது.

3. அதற்குமேல் தேவரீர் "ஸ்ரீபாஷ்யத்தின் ஆதியிலும் அந்தத்திலுமாக இரண்டு கேள்விகள் கேட்கிறேன். ஆதியில் 'விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே' என்றவிடத்தில் ச்ருதப்ரகாசிகையில் ப்ராஹ்மணஸமாஜ:, ராஜபரிஷத் என்ற இரண்டு வ்யவஹாரங்களையெடுத்துக்கொண்டு ஸாதித்திருப்பதும் அதைத் தேசிகன் தத்வடீகையில் மிக மிக விளக்கியிருப்பதும் நினைவிருக்கிறதா?" என்றுவினவியதற்கு "ப்ராஹ்மண ஸமாஜமென்று சொன்னால் அந்த ஸமாஜத்தில் பிராமணர்கள் மட்டுமே கூடியிருப்பதாகவும் இதர ஜாதியர்களின் சேர்க்கை அங்கு இல்லையாகவும் உலகத்தில் ஸ்பஷ்டமாகக் காண்கிறது. ராஜபரிஷத்தென்று சொன்னால் இப்படிக் காணப்படுவதில்லை. கேவலம் ராஜாக்கள் மட்டுமே கூடுகிற கூட்டத்தையா ராஜ பரிஷத்தென்கிறோம்? இல்லை; மந்த்ரிகளும் ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனோடு கூடியிருக்குமிருப்பையே 'ராஜபரிஷத்' என்கிறோம். 'ப்ராஹ்மண ஸமாஜ:' என்ற விடத்திலும் 'ராஜபரிஷத்' என்ற விடத்திலும் அவிசேஷேண ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமே கொள்ளுகிறோம். ஸமாஸத்தில் வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசியுள்ளது. ச்ருதப்ரகாசிகாபட்டர் இவற்றையெடுத்துக்காட்டி விரிவாக அருளிச் செய்துள்ளார். விநதப்ராணிகளுக்குமட்டும் மோக்ஷமளிக்கை யன்றிக்கே அந்த ப்ராணிகளோடு ஸம்பந்தம் பெற்றவர்களுக்குங்கூட அந்த விநதப்ராணிகளின் விநதியே காரணமாக மோக்ஷமளிக்கிறானெம்பெருமானென்றருளியுள்ளார். இங்கு 'தத ஏவ காரணாத்' என்கிற ஸ்ரீஸூக்தி ஜீவநாடியாக வுள்ளது. இவ்வர்த்தத்தை தேசிகர் தத்வடீகையில் வெகு அழகாக உபபாதித்துப் பொருந்தவைக்கிறார். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் மிக அழகானவை. மூலத்தில் ரக்ஷாபதத்தாலே விவக்ஷிதமான ரக்ஷணம் 'அஸாதாரணஸ்ய பரமப்ரயோஜநஸ்ய மோக்ஷஸ்யைவ ப்ரதாநம்' என்று நிர்ணீதமாயிருக்கையாலே இந்த மோக்ஷப்ரதாநம் விநதபூதங்களுக்குமட்டுமன்று, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் அப்ரதிஹதம் என்கிற அர்த்தமே தத்வடீகாஸூக்திகளாலும் விசதீக்ருதமாயிற்று. சரணாகதிகத்யத்தில் 'பகவந்நாராயணபிமதேத்யாதி சூர்ணையினால் புருஷகாரப்ரபத்தி செய்தருளின எம்பெருமானார்க்கு ப்ரதிவசநமிட்டருளின ஸ்ரீரங்கநாச்சியார் 'அஸ்து தே' என்றவளவோடு நில்லாமல் 'தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே' என்று மருளிச் செய்தவிடத்தில் அவ்விடத்து ச்ருதப்ரகாசிகையில் 'ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்' என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதும் இங்கு அநுஸந்தேயம் என்று பலகால் தேவரீர் எழுதி

யிருப்பதை மனப்பாடம் செய்திருக்கிறேன். அன்றியும் ந்யாஸதிலகத்தில் *அந்தோ நந்த ச்லோகத்தில் 'புங்க்தே போகாந் அவிதித ந்ருப: ஸேவகஸ்யார்ப்பகாதி:' என்ற விடத்திற்குத் தேவரீருடைய வ்யாக்யானத்தையும் மனப்பாடம் செய்திருக்கிறேன். அதிலேயே *உக்த்யா தநஞ்ஜய ச்லோகத்தில் 'ச்ருத்வா வரம் ததநுபந்த மதா வலிப்தே' என்றவிடத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட வரத்தின் ஸ்வரூபத்தைத் திருக்குடந்தை வித்வான்களச்சிட்ட வ்யாக்யானத்திலிருந்து தேவரீர் எடுத்துக் காட்டிய தையும் சிக்கனக் கொண்டிருக்கிறேன். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் 'த்வயத்தின் ஆசார்யோச்சாரண அநுச்சாரண முகத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு' என்கிற ஸ்ரீஸூக்தியையும், சரணாகதிகத்யபாஷ்ய முடிவிலும் அப்படியே ஸம்ஸ்க்ருதத்தில் அருளிச் செய்திருப்பதையும், எதையும் அடியேன் மறக்கவில்லை.'' என்று மதுராந்தக ஸ்வாமி விடையிறுத்திருப்பது அவருடைய பரம ப்ராமாணிகத்வத்தைக் குன்றிலிட்ட விளக்காகக் காட்டுகின்றது.

4. அதற்குமேல் தேவரீர் ''ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் (அநாவ்ருத்தி ஸூத்ர பாஷ்யத்திலிருந்து அடியேன் பலகால் எடுத்துக் காட்டியுள்ள விஷயம் நினைவிருக்குமானால் அதை இங்கு ஸாதிக்கக்கூடுமோ?'' என்று வினவியதற்கு மதுராந்தகர் 'முக்தாத்மாவுக்கு மீட்சி உண்டா இல்லையா என்கிற விசாரத்தில் அது இல்லை என்று முடிக்கப்பட்டது. ஒரு உபநிஷத் வாக்கியத்தையும் ஒரு கீதா வசனத்தையும் ப்ரமாணமாகக் கொண்டு இவ்விஷயம் ஸாதித்து முடிக்கப்பட்டது. அவ்வளவோடு ஸூத்ரபாஷ்யம் நிற்கவேண்டும். இதர பாஷ்யகாரர்கள் அப்படியே முடித்து நிறுத்தியிருக்கிறார்கள். நமது பாஷ்யகாரர்மட்டும் அதிகப்படியாக இரண்டு வாக்கியங்களைப் பொறித்திருக்கிறார். அதில் இரண்டாவது வாக்யம் நிதியானது. ஸ்வாமி அருளிச்செயற் கடலில் ஆழ மூழ்கினவரென்பதை நன்கு காட்டுகின்றதது. (அதாவது) முக்தாத்மாவுக்கு மீட்சியில்லை என்பதை சாஸ்த்ரம் கொண்டு நிர்ணயிக்க வேண்டுமோ? எம்பெருமானுடைய இயல்புகொண்டே எளிதாக நிர்ணயிக்கலாமே! சேதனர்களைத்தான் பெறுவதற்காக எத்தனையோ க்ருஷிகளைப் பண்ணினவன் அன்றோ அப்பெருமான்! அந்த க்ருஷிகள் பலித்துத் தான் பேறுபெற்று மகிழ்ந்திருக்கும்போது அந்த முக்தாத்மாவைத் திருப்பி அனுப்ப நினைப்பனா? அவன் பரம ரஸிகன் அன்றோ! என்று திருவுள்ளத்தில் கொண்டன்றோ ''ந ச பரம புருஷ: ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் 'ஜ்ஞாநிநம் லப்த்வா' என்கிற ஸ்ரீஸூக்தியை அருளிச்செய்தார். இங்கு 'ஆகதம் ஜ்ஞாநிநம்' (தன்னிடம் வந்த ஜ்ஞாநியை) என்று எழுதாமல் 'ஜ்ஞாநிநம் லப்த்வா' என்று எழுதியது மிகவியக்கத்தக்க ஸாரப்பொருளாகும். உபநிஷத்தில் 'ரஸோ வை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி' என்று சேதநன் பரமசேதனனை லபித்து ஆநந்திப்பதாக ஓதி யிருக்கச் செய்தேயும் நம் ஸ்வாமி சேதனலாபம் ஈச்வரனுக்கே ஒழிய ஈச்வரலாபம் சேதநனுக்கன்று என்கிற பரமார்த்தத்தை நன்குணர்ந்தவராதலால் இது ஸ்ரீபாஷ்யத்தில் குன்றிலிட்ட விளக்காக விளங்கவேணுமென்று திருவுள்ளம் பற்றியே இந்த ஸ்ரீஸூக்தியை இவ்விதமாக அருளிச்செய்தார். நம்மாழ்வார் திருவாய் மொழியில் 'வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று ஆர்வுற்ற என்னை யொழிய என்னில் முன்னம் பாரித்து, தானென்னை முற்றப்பருகினான்' என்

றருளிச் செய்த பாசுரத்தை நித்யாநுஸந்தாநம் செய்தருளினவர் எம்பெருமானுர். ஸ்ரீபாஷ்யாவஸாநத்தில் இந்த ஸ்ரீஸூக்தியை அருளிச்செய்தது 'திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார்' என்பதை மூதலிக்கின்றது. 'அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா' என்கிற இந்த ஸ்ரீஸூக்தி ஸ்ரீபாஷ்யத்தில் இடம் பெறுதிருந்தால் 'பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்க விடுவர்' என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தி அர்த்தமற்றதாகவே யிருக்குமென்று தேவரீர் ஏழெட்டு நூல்களில் ஆணித்தரமாக எழுதியிருப்பதை அடியேன் க்ருதஜ்ஞதையுடன் அநுஸந்தித்து வருவதோடு ஆங்காங்கு உபந்யஸித்தும் வருகிறேன். இவ்வரிய பெரிய விஷயம் தேவரீருடைய நூல்களில் மட்டுமே காணப்படுகிறது'' என்று மதுராந்தகர் விரிவாக விடை தந்திருப்பது மிகமிக அபிநந்திக்கத்தக்கது.

5. அதற்குமேல் தேவரீர், ''யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:'' என்கிற ச்ருதி வாக்யத்தின் பொருளை விவரிக்க முடியுமா? என்று வினவியதற்கு மதுராந்தகர் ''இந்த வாக்யம் *நாயமாத்மா ச்ருதியிலுள்ளது. அந்த ச்ருதியாவது 'நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: ந மேதயா ந பஹுநா ச்ருதேந, யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்' — என்பதாம். இந்த ச்ருதியை நம் ஸ்வாமி கீதாபாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலும் பலகால் உதாஹரித்தருளி யுள்ளார். 'ஏஷ: யம் வ்ருணுதே தேநைவ லப்ய:''—பரமபுருஷன் தானே எந்த சேதனனை ஸ்வீகரிக்கிறானோ அந்த சேதனனால் தான் (பரமபுருஷன்) லபிக்கத்தக்கவனுவன் என்று நிஸ்ஸந்தேஹமாகப் பொருள் கிடைக்கிறது. வஸுதேவன் தவம் புரிந்து கண்ணனைப் பிள்ளையாகப் பெற்றான். பிறந்த கண்ணன் அடுத்த க்ஷணத்தில் நந்தகோபனை ஸ்வஸ்வீகாரத்திற்கு விஷயமாக்கினன். 'நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன் வசுதேவன் பெற்றிலனே' என்றும், 'எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே' என்றும் குலசேகராழ்வார் பாசுரம் பாடும்படியாயிற்று. மேலெடுத்த ச்ருதி 'ஏஷ: யம் வ்ருணுதே தேநைவ லப்ய:' என்ற அளவோடு நில்லாமல் அதற்குமேல் 'தஸ்யைஷ ஆத்மா ஸ்வாம் தநூம் விவ்ருணுதே' என்றும் ஓதினதற்குச்சேர கண்ணபிரானுடைய பாதாதி கேசாந்தமான திவ்ய மங்கள விக்ரஹாநுபவத்தை பெரியாழ்வாருடைய *சீதக்கடல் திருமொழிப்படியே நந்தகோப யசோதைகளுக்குப் பெறுவித்த பாங்கையும் தேவரீர் விவரித்திருக்குமழகை அடியேன் ஆர அமர அநுபவித்தவன், அநுபவித்துக்கொண்டிருப்பவன், யாவதாத்மபாவி மேலும் அநுபவித்துக்கொண்டேயிருக்கப் போகிறவன்'' என்று அற்புதமாக (அவர்) விடையிறுத்தது ஒவ்வொருவருடைய நெஞ்சையும் விட்டகலாதது.

6. அதற்குமேல் தேவரீர் ''ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில்—'இப்படி நாராயண சப்தத்தில் ஸித்தமான குணவிசேஷ ஸம்பந்தங்களடியாகப் பிறக்கும் கலக்கங்களுக்குப் பரிஹாரம் உதாஹரித்தோம்' என்று தலைக்கட்டி 'இனி.....ஸபத்நீகனுய்க் கொண்டு ஸர்வரக்ஷணயஜ்ஞதீக்ஷிதனுன ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீமச்சப்தத்திலே சொல்லுகிற பத்நீஸம்பந்தத்

தில் வரும் கலக்கங்களுக்கு திங்மாத்ரத்தாலே பரிஹாரம் காட்டுகிறோம்' என்று தொடங்கின வாக்ய ராசியிலே '**ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார்**' என்று ஸாதித்திருப்பது நினைவுக்கு வருகிறதா? பெரியஜீயர் ஸ்ரீஸூக்த பாஷ்யத்திலே எந்த அபேக்ஷிதார்த்தங்களை எப்படி உபபாதித்தார் என்பதைத் தேவரீர் விளக்க முடியுமா?'' என்று வினவியதற்கு மதுராந்தகர் ''இது தேவரீருடைய நூல்களில் பலகால் கண்டதேயாகும். என்னைப் போன்ற பல வித்வான்கள் இந்தக் கேள்வியைக் கண்டேயிருக்கின்றார்கள். விடை வெளி வந்ததாகத் தெரியவில்லை. அடியேன் இங்கு விடைகூறவேண்டுமானல் இப்படித்தான் விடைகூறவேண்டும். (எப்படியென்னில்) பெரிய ஜீயர் என்றது எம்பெருமானார் காலம் தொடங்கித் திருமலை திருப்பதியில் ஒழிவில் காலமெல்லாம் உடனுய்மன்னி வழுவிலா வடிமைசெய்து வரும் ஜீயர் பரம்பரையில் வருகின்றவரை அன்று. தேசிகனுடைய ஸமகாலத்திலோ சிறிது முற்காலத்திலோ இருந்த ஒரு ஜீயர் என்று கொள்ளவேணும். ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் என்றது ஸ்ரீஸூக்தத்திற்கு அவர் செய்த வியாக்கியானத்தில் என்றபடி. 'அபேக்ஷிதார்த்தங்களையெல்லாம் உபபாதித்தார்' என்றது வேண்டிய பொருள்களையெல்லாம் விளங்கவைத்தார் என்றபடி' என்றுதான் அடியேனே, அடியேன்போல்வாரோ விடைகூற முடியும். வைகுண்டவாஸியான ஸ்ரீயதுபயவே. இஞ்சிமேட்டு ஸ்வாமியும் அவர்க்கு முற்பட்ட வ்யாக்யானகாரர்களும் இப்படித்தானே எழுதிவைத்திருக்கிறார்கள்! அதைவிட அதிகம் அடியேன் என்ன சொல்ல முடியும்?'' என்று ஸாதித்தவிடை லோகோத்தரமானது. மிகமிக மெச்சத்தக்கது.

7. அதற்குமேல் தேவரீர், ''இந்த வாக்யத்திற்கு மேலே (அதே இடத்தில்) 'இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தேயும் பற்றினது விடா தொழியில், த்ருடபூர்வ ச்ருதோ மூர்க்க:.........என்கிற தசையாம்' இத்யாதி வாக்யமுள்ளதே, இதுவும் நினைவிருக்குமே, இங்குக் கேட்கிறேன். மத்யஸ்த த்ருஷ்டியாலே தோற்றின ப்ராமாணிகார்த்தங்கள் எவை? பற்றினது விடாமல் பிடிவாதமாகச் சொல்லுகிற அர்த்தம் எது? அப்படிச் சொல்லுகிறவர்கள் யார்? இதைச் சிறிது விளக்கியருள முடியுமா?'' என்று வினவியதற்கு மதுராந்தகர், ''மத்யஸ்த த்ருஷ்டியாலே' என்றது நடுத்தரமான பார்வையாலே என்றபடி. 'ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தேயும்' என்றது சரியான பொருள்கள் தோற்றச் செய்தேயும் என்றபடி. 'பற்றினது விடாதொழியில்' என்றது தாங்கள் கொண்ட அர்த்தத்தையே பிடித்துக்கொண்டு போராடினுல் என்றபடி. த்ருடபூர்வச்ருத:— பூர்வேப்ய: ச்ருதம்— பூர்வச்ருதம். தத் த்ருடம் யஸ்ய ஸ: த்ருடபூர்வச்ருத: = முன்னோர்களான ஆசார்யர்களிடத்தில் கேட்டதையே திடமாக வைத்துக் கொண்டிருப்பவன் மூர்க்கன் என்றபடி. அவரவர்கள் தங்கள் தங்கள் புத்தியைச் செலுத்தி அர்த்தங்கள் கண்டுபிடிக்கவேண்டியிருக்க அது செய்யாமல் முன்னோர் மொழிந்தவற்றைக்கேட்டு அவற்றையே திடமாகக் கொண்டிருப்பவன் மூர்க்கன் என்றபடி. ரஹஸ்ய ரத்நாவளியென்கிற ரஹஸ்யத்தில் ''ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்............ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதி

சயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்'' என்றருளிச்செய்து, இதை ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்திலே தாமே விவரித்தருளுகிறார். அது வீணான விவரணம் என்று நினைக்க வொண்ணாதபடி ஒரு விசேஷமும் அதில் வைத்திருக்கிறார். அதாவது தஞ்சமாகின்றாள் என்பதற்கு ரக்ஷணஹேது வாகிறாள் என்று விவரணம் காட்டப்பட்டது. பிராட்டி தான் ரக்ஷிக்கிறாள் என்னாதே எம்பெருமான் செய்யும் ரக்ஷணத்திற்கு இவள் தான் ஹேதுவாகிறாள் என்று ஸாதித்தாராயிருக்கிறது. இதையெல்லாம் தேவரீர் கல்வெட்டும் செப்பேடுமாக எடுத்துக் காட்டியிருந்து இங்கு அடியேனைத் தொண தொணவென்று கேட்டால் அடியேன் என்ன சொல்லுவது! பிராட்டிக்கு புருஷகாரத்வம் ஒழிய வேறு ஒன்றுமில்லையென்று கல்வெட்டு செய்திருக்கிற தேசிகன் அதற்கு முரணாக ஸாதிக்கப் ப்ரஸக்தியில்லை. ''மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வ ஸம்மதம்'' என்று அருளிச்செய்தவர் தேசிகன். ''அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணம் அநுக்ரஹே'' என்றும் ஸாதித்தவர் தேசிகன். அப்படிப்பட்டவர் இங்கு ஸாதிப்பது அதற்கெல்லாம் முரணாக இருக்கத் தகாது. இருக்கிறதே என்றால் ஆழ்ந்து ஆலோசித்துத்தான் ஆகவேண்டும். 'காலக்ஷேபங்களில் இப்படிப்பட்ட முரணான இடங்கள் வரும்போது ப்ரவசனகாரர்கள் ஸீமந்தப்ரஸ்தாபங்களையும், குசலப்ரச்நங்களையும் புகவிட்டு ஸமாப்தி செய்கிறார்கள்' என்று தேவரீர் எழுதுவது நன்றாக இல்லை என்று தோன்றுகிறது. *அவரவர் தாம்தாம் அறிந்தவாறேத்தி* என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்திருக்கவில்லையா?'' என்று (அவர்)கூறின விடை ஸர்வோத்தமமானது. யாவராலும் ச்லாகிக்கத் தக்கது. இதையெல்லாம் அடியேன் கோஷ்டியில் உபந்யஸிக்கக் கேட்டவர்கள், ''இந்த ஸ்வாமிக்கு இவ்வளவு ப்ராமாணிகத்வம் எங்ஙனே விளைந்தது?'' என்று கேட்டார்கள். அங்கு ஸ்ரீரங்கத்திலிருந்து வந்திருந்த வேறொரு ஸ்வாமி ''நேற்று திருவாடிப்பூரத்தன்று இந்த ஸ்வாமி ஸ்ரீரங்கநாச்சியார் ஸன்னிதிக்குச் சென்றிருந்து நாச்சியாரை ஸேவித்தார்; நாச்சியாருடைய அநுக்ரஹமடியாகவே விளைந்தது'' என்று ஸாதித்ததோடு தாம் ஒரு நாள் மதுராந்தகம் ஸ்வாமியை நோக்கி ''எம்பெருமானார் பெரியநம்பி பக்கலிலே திருவிலச்சினை பெற்றதையும் பெரிய திருமலை நம்பி பக்கலிலே ஸ்ரீராமாயணம் கேட்டதையும் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிப் பொருள் கேட்டதையும் திருக்கோட்டியூர்நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்ததையும் ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாதத்திலே அருளிச் செயலோதி நல்வார்த்தைகள் கேட்டதையும் எழுதி வைத்திருக்கிற தேசிகன் (அந்த பாஷ்யகாரருக்கு) இன்னாரிடத்திலே அநுஷ்டானமாயிற்றென்று ஏன் ஒருவரி எழுதவில்லை?'' என்று கேட்டதையும் அதற்கு மதுராந்தகம் ஸ்வாமி ''இந்த அநுஷ்டானம் அக்காலத்தில் இல்லை, கோபால தேசிகன் காலத்திலோ ஸாக்ஷாத் ஸ்வாமி காலத்திலோ அங்குரித்ததென்று கேள்வி'' என்று விடையிறுத்ததையும் தெரிவித்தார். ''மதிராபிந்து மிச்ரமான... உபாயாந்தரம்'' என்ற திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய ஸ்ரீஸூக்தியின் சுவடறியாமல் ''மத்யோபஹத...பக்திவத்'' என்று காரிகையிட்டு தூஷித்துவிட்டார் தேசிகனென்று தேவரீர் ஸாதித்ததற்கு மதுராந்தகர் என்ன தெரிவித்தாரென்று தெரியவில்லை. ''அப்ரதிஷித்தம் அநுமதம் பவதி'' என்கிற நியாயத்தாலே பல விஷயங்களிலே காட்டின அநுமதியையே இதிலும் காட்டினர்போலும்.

# ஏதுக்கந்தோ இன்னமும் வீணான நப்பாசை?

## புநர்வஸு பத்ரிகா பரிசீலனம்

நேற்று அக்டோபர் மாதத்தில் வெளிவந்த 192 லக்கமுள்ள புநர்வஸு பத்ரிகை வரப்பெற்றோம். அதில் "திருப்பாவை விமர்சனம் (முடிவு)" என்று மகுடம் புனைந்த கட்டுரை கண்டோம். சென்ற திருவாடிப்பூரத் தன்று ஸ்ரீரங்கத்தில் நாச்சியார் ஸன்னிதியில் மதுராந்தக வித்வானும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரான (வாவதூக ஸார்வபௌம பிருதாலங்க்ருதரான) புத்தூர் ஸ்வாமியும் சேர்ந்து ஒரு உடன்படிக்கை எழுதி இருவரும் கையொப்பமிட்டு விவாத சாந்தி செய்து கொண்டதாகத் தெரிவிக்கப் பட்டிருப்பது மிகவும் ஸந்தோஷகரம். ஆனால் இதைத் தெரிவிப்பதோடு நில்லாமல் மேன்மேலும் விவாதம் வளர்ந்துசெல்வதற்கு பீஜாவாபம் செய்திருக்கிறார் மதுராந்தக நண்பர். அதாவது "பஞ்சவிஜய பூர்த்தி" என்று மகுடமிட்டு ஏதேதோ எழுதிவருகையில் மிகவும் அஸம்பத்தமாக எழுதியிருப்பதாவது, "அம்மாள் உபயஸம்ப்ரதாயஸ்தருக்கும் பொதுவான ஆசார்யர் என்பதை ஒப்புக் கொண்டுள்ளார். அதைத் தழுவியே எனது "சம்பிரதாய ஸுதை" அவதரித்தது. நடாதூர் அம்மாள் அருளிய ரஹஸ்யப்ரஸ்தானகிரந்தம் ப்ரபந்நபாரிஜாதம் ஒன்றே. மற்றவை சாரீரகப்ரஸ்தானத்தைச் சேர்ந்தவை. இந்த கிரந்தம் அம்மாள் அருளியதன்று என்பதாக நிலைநாட்டியதாக இவர் எழுதிவந்தார் முன்பு. இதைப் பிராட்டியின் விபுத்வோபாயத்வ ஸமர்த்தநப்ரகரணத்திலே தேசிகன் திருக்குமாரரான நயினாராசார்யர் தனது ரஹஸ்யத்ரயஸார ஸங்க்ரஹத்தில் 'ப்ரபந்நபாரிஜாதே பூர்வாசார்யை:...' என்று குறிப்பிட்டிருப்பதையும், ந்ருஸிம்ஹ ராஜாசார்யார் தமது ரக்ஷாவ்யாக்யானத்தில் உதாஹரித்திருப்பதையும், சாரப்ரகாசிகை என்னும் வியாக்யானத்திலும் ஸ்ரீவசனபூஷண பாஷ்யத்தில் பலவிடங்களிலும் ஆதாரமாகக் காட்டியிருப்பதையும் எனது விஜய கிரந்தங்களில் தெரிவித்துள்ளேன். எங்களாழ்வானுக்கு சிஷ்யக்ருத்யத்தோடு புத்ரக்ருத்யமான ச்ரமகைங்கர்யம் செய்து அவர் பக்கலிலே ஸர்வார்த்த க்ரஹணம் பண்ணியவர் நடாதூரம்மாள். ஸுதையில் பற்பல அதிகாரங்களில் இவருடைய பாரிஜாத கிரந்தத்தை உதாஹரித்து சம்பிரதாய பேதத்திற்கு அவகாசமில்லை என்பதை ஸ்தாபித்துள்ளேன்"—என்று. மதுராந்தக நண்பரின் இந்த வாக்யச்ரேணியிலுள்ள அபத்த அஸம்பத்தங்களை விரிவுக்கு அஞ்சாமல் விவரிக்கின்றேன். அருணோதயத்தில் தாலி கட்டப்பெற்று சூரியோதயத்தில் அதனை இழந்த ஒரு பெண் பத்தெட்டு வருஷங்களுக்குப் பிறகு— 'என்னுடைய கணவர்—என்னுடையஎஜமானர்—என்னுடைய பர்த்தா—என்னுடைய நாயகர்—எங்கடவர்" என்று தொடங்கி ஏதேதோ சொல்லிக் கொண்டிருப்பளாம். அதைக் கேட்கும் பெண்கள் சிரித்துக்கொண்டேயிருப்பர்களாம். அதைப்போல் நமது மதுராந்தக நண்பர் தமது உத்பந்ந விநஷ்டமான ஒரு சுவடியைப்பற்றி ஸங்கோசமில்லாமல் எழுதுவது மிக வியக்கத்தக்கது. ஆறு வருஷங்கட்கு முன்பு இவர் ஸம்ப்ரதாய ஸுதா என்னும் ஸுவடியை எழுதி வெளியிட்டது வாஸ்தவம். அது நமது கண்ணில் பட்டவன்றே நீறாகி ஒழிந்தது உலக மறிந்தது. ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் என்கிற நமது நூல் 56 பக்கம் கொண்

டது. (இரண்டு ஆஹ்நிகமாக அவதரித்தது.) அதில் இவருடைய துர்வாதங்களெல்லாம் வேரறக் களைந்தொழிக்கப்பட்டுள்ளன. அவ்வளவே யன்றிக்கே வைதிக மனோஹரா என்கிற நமது ஸம்ஸ்க்ருத பத்திரிகையிலும் முக்கியமான மறுப்புகள் வெளியிடப்பட்டுள்ளன. இப்போது அந்த ஸுதா ஜீவித்திருப்பதாகக் காட்டிக்கொள்ள இவர் ஆசைப்படுவது ஆச்சரியமாக உள்ளது. இவருடைய ஸுதாவுக்குக் கண்டனமாக நாம் எழுதி வெளியிட்டுள்ள ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் ஸ்ரீ ராமாநுஜன் 229, 230, 231 ஆகிய மூன்று ஸஞ்சிகைகளில் வெளிவந்துள்ளது. அதில் கடைசி பக்கமாகிய 56-ம் பக்கத்திலுள்ள விஷயத்தை உலகபறிய இங்கு உதாஹரிக்கிறேன். (அதாவது)

''நமது ஸாம்ராஜ்ய நூலில் (ஆரம்ப ஸஞ்சிகையில் பதின்மூன்றுவது வாக்யச்ரேணியில் பக்கம்-24ல்) ''ஆக இவ்விருவரும் [மதுராந்தக ஸ்வாமியும் D. T. தாதாசார்ய ஸ்வாமியும்] பகவத்ராமாநுஜ தர்சநபாஹ்யர்களென்பது பன்னிரண்டாண்டுகளாக ப்ரஸித்தமாகியுள்ளது; இதைப்பற்றி வாயைக்கையைத் திறந்திலரிவர்............ஒரு பக்கத்தில் [அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம் என்று] தேசிகஸூக்தி தூஷணமும், மற்றொருபக்கத்தில் [நிர்ப்பந்தாதேவ இத்யாதிநா] பகவத்ராமாநுஜ தூஷணமுமாகப் போதுபோக்கி வருமிவர்கள் எந்த ப்ரமாணத்தைக்கொண்டு எந்த ப்ரமேயத்தை ஸாதிக்கவல்லவர்களோ, அதை மத்யஸ்தர்களே நிர்ணயிக்கக்கடவர்கள். இவர்கள் திறத்தில் வ்ருச்சிகதஷ்டமலிம்லுசந்யாயத்தைப் பலகால் விளக்கியிருக்கிறோம். அவ்விருவரும் விடையிறுத்துத் தீரவேண்டிய விஷயங்கள் ஒன்றிரண்டல்ல; ஒரு நூறு தேறும். எல்லாவற்றுக்கும் விடை வெளியிட்டு விட்டோமென்று உலகவஞ்சனையாகச் சொல்லிப் பிழைக்கவும் முடியாதிவர்களால். எத்தனை விஷயங்களுக்கு இவர்கள் விடையிறுத்தாகவேண்டுமென்பதை ஸ்ரீ உ. வே. Raosahib. S. ராகவையங்கார்ஸ்வாமி போல்வாரைக் கேட்டால் புத்தகம் பாராதே கிடுகிடு வென்று வரிசையாகச் சொல்லுவர்கள்.'' என்றெழுதியிருந்தோம். இங்கு 'ராகவையங்கார் ஸ்வாமிபோல்வாரை' என்று நாமெழுதியது வார்த்தைப்பாடு; இவ்விஷயத்தில் அவரைப்போல்வாரொருவர் வேறொருவர் கிடையார்; அநந்வயாலங்காரரீதியில் அவரைப்போல்வார் அவரேதான். அந்த ஸ்வாமி சென்ற 1967 ஷ ஐப்பசி மாதத்தில் சதாபிஷேகம் கண்டருளினவர்; ஜ்ஞாநசீலவயோவ்ருத்தர். அந்த ஸ்வாமி இந்த ஸாம்ராஜ்ய நூல் வெளிவந்தவரைக்கும் [80 பாராக்களையும்] பூர்த்தியாகக் கடாக்ஷித்து அருளியுள்ள ஸ்ரீமுகம் பாரதராமாயணாதிகளைப் போனறது; அதைப் பார்த்தபிறகு ஏதுக்கு இந்த வீண்பரிச்ரமமென்று தோன்றிற்று. அந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகத்திலிருந்து ஸ்வல்ப பாகமே தெரிவிக்கிறேனிங்கு. 'ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் பாரா 38ல் **நம்முடைய கோரமான சபதமொன்று** என்னும் மகுடம் புனைந்ததில், கி. பி. 19-வது நூற்றுண்டு பிறந்த பிறகுதான் நீங்கள் தேசிகனை யறிந்தவர்களே யொழிய அதற்கு முன்பு தேசிகனென்றோ எம்பெருமானாரென்றோ ஆழ்வாரென்றோ ப்ரஸ்தாவித்த ஒரு வடகலை வ்யக்திகூட இல்லையென்று நாம் நெடுநாளாக நிரூபித்து வருகிறோம். அப்படிப்

பட்டவொரு புராதந வ்யக்தியைக் காட்டிவிட்டீர்களானுல் இதுகாறும் நான்கு பாஷைகளிலும் நான் எழுதிவெளியிட்டுள்ள எழுநூறு புத்தகங்களையும் கிழித்தெறிந்துவிட்டு ஆயுச்சேஷமுள்ள வரையில் அஜ்ஞாதவாஸம் செய்வேனென்பது ஸத்யம்—என்று தேவரீர் எழுதியிருப்பதைக் கண்டுவைத்தும் வாயையும் கையையும் மூடிக்கிடப்பவர்களோடு என்ன பிணக்கு?' என்கிறுர் ராகவையங்கார் ஸ்வாமி. சேட்லூர் நரஸிம்ஹாசாரியரும் (திருச்சி) ஏ. வி. கோபாலாசாரியரும் எந்தெந்த விஷயங்களில் நெடுநாள் வாதித்து முடிவில் க்ஷாமணம் செய்துகொண்டு ஓய்ந்தார்களோ, அந்த விஷயங்களை மேன்மேலும் வளர்த்திக்கொண்டு போவதில் என்ன பயன்? என்றும் வினவுகிறுர். ஆகவே மதுராந்தகம் ஸ்வாமியிடமிருந்து நேர்மையான விடையளிப்பு ஏதேனும் வந்தால் மேலே தொடர்ந்து எழுதுவோமென்று நிறுத்திக்கொண்டோம்.''

இதுதான் நமது ஸாம்ராஜ்ய நூலின் உபஸம்ஹாரம்.

புநர்வஸு பத்ராதிப ஸ்வாமி வைஷம்யம் அறியாதவர். ஸஹ்ருதய ஸார்வ பௌமர். அந்த ஸ்வாமியை மத்யஸ்த்தராக நிறுத்தி இப்போது தெரிவிக்கிறேன். மதுராந்தகருடைய ஸம்ப்ரதாய ஸுதா என்னும் சுவடிக்கு என்னுடைய மறுப்பு வெளிவந்ததுண்டா இல்லையா? அதற்கு மதுராந்தகர் ஏதேனும் மறுப்பு எழுதிற்றுண்டா? எழுத நினைத்ததாவதுண்டா? ''ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய மென்கிற மறுப்புநூல் வெளிவந்ததுண்டு. ஆனுல் ஸுதையில் நான் எழுதிய விஷயங்களுக்கு சரியான விடை வெளிவரவில்லை'' என்று மதுராந்தக நண்பர் ஸாதிப்பரேல் அதை புனர்வஸு பத்திரிகையில் விளக்கமாக வெளியிடட்டும் வெளிவந்துள்ள நமது மறுப்புகளுக்கு விடையிறுக்கட்டும். தாம் எழுதிய எந்தெந்த விஷயங்களுக்கு என்னிடமிருந்து விடை வெளிவரவில்லைஎன்கிறுரோ அந்தந்த விஷயங்களை இன்னின்னவை என்று குறிப்பிடட்டும். இந்தப் பொறுப்பை புநர்வஸு பத்ராதிப ஸ்வாமி ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்த விஷயத்தில் இவர் (பத்ராதிபர்) தலையிடாமலே இருந்திருந்தால் இப்படி நாம் அபேக்ஷிக்க அவகாசமிராது. மதுராந்தக நண்பருடைய அஸம்பத்த கட்டுரையை அநவஸரமாக வெளியிட்ட பத்ராதிபர் இவ்வபேக்ஷையை நிறைவேற்றியேயாக வேண்டும். மதுராந்தக நண்பரும் அடிக்கடி 'சுதையில் ஸ்தாபித்தோ'மென்றும், 'சுதையில் எழுதினுே'மென்றும் அபத்தமாக எழுதுவதை இனி விட்டிடவேண்டும். விடமாட்டேனென்றுல் அந்த சுதையென்னும் சுவடியில் இன்னமும் ஜீவித்திருப்பதாக இவர் தாம் நினைக்கிற விஷயங்களை புநர்வஸு மூலமாகவோ வேறு சுவடிமூலமாகவோ உலகமறிய வெளியிட்டாகவேண்டும்.

அம்மாள் உபய ஸம்ப்ரதாயஸ்தருக்கும் பொதுவான ஆசார்யர் என்பதை மறுப்பார் ஆருமில்லை. அவருடைய சிஷ்யரான ஸுதர்சன பட்டர் அருளிச்செய்த ஸ்ரீ பாஷ்யச்ருதப்ரகாசிகையைக் கொண்டாடும் ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாரும் அம்மாளுடைய ஸ்ரீஸூக்திகளையும் கொண்டாடக் கடமைப்பட்டவர்களேயாவர். ப்ரபன்ன பாரிஜாதமென்கிற க்ரந்தம் அவர் பணித்ததாகச் சொல்லுவது ஏற்

கனவே மறுக்கப்பட்டு விட்டது. அது அவருடைய க்ருதியன்று. அதிலுள்ள விஷயங்கள் ப்ராமாணிகமா, அப்ராமாணிகமா என்கிற விசாரத்தில் நாம் புகவேண்டா. அது அம்மாள் பணித்ததன்று என்பதை சிலாலிகித மாக்கியிருக்கிறோம். தேசிகனுடைய திருக்குமாரரான நயனாராசாரியர் ரஹஸ்யத்ரயஸார ஸங்க்ரஹமென்று ஒரு க்ரந்தம் எழுதி யிருப்பதாக மதுராந்தகர் எழுதியுள்ளது பெரும் புளுகு அல்லது மருள் வேறொருவர் எழுதிய புத்தகமது. அதிகரண ஸாராவளிக்கு வ்யாக்யானமாக அவர் (நயனாராசாரியர்) ஸாதித்ததாய் அச்சிடப் பட்டுள்ள அதிகரண சிந்தாமணியைப் பற்றித் திருப்புட்குழி அப்பர ஸ்வாமியும் அவருடைய சிஷ்யரான தண்டரி பட்டப்பா தாதாசாரிய ஸ்வாமியும் "இது நயனாராசாரியர் க்ருதியன்று" என்று எழுதியிருப்பதை இவர் கண்டிருப்பர். அதேபோல இப்போது இவர் குறிப்பிடும் சுவடியும் அவருடைய க்ருதியன்று என்பதும் ஏற்கனவே சிலாலிகிதம். "ஹரிதிந திலகம்" "கிங்க்ருஹேசஸ்துதி" இவற்றைத் தேசிக க்ருதிகளாகச் சொல்லுமவர்கள் இன்னமும் உளரன்றோ? அப்படியே ப்ரபந்ந பாரிஜாதத்தையும் அம்மாள் க்ருதியாக இவர் சொல்லிக் கொண்டிருக்கட்டுமே. இப்போது நயனாராசாரியர் ஸூக்தியாக இவர் காட்டுவதிலும் அம்மாள் பெயரில்லை. வேறு சிலருடைய ஸ்ரீஸூக்திகளிலும் அம்மாள் பெயர் இருப்பதாகக் காட்டவில்லை. ஸோமாசியாண்டானுடைய நூல் போலே அந்த ஒரு நூலும் இருந்திருக்கட்டுமே. அதனாலென்ன? உண்மையில் அந்த நூல் தேசிகனுடைய திருக்கண்களில் பட்டிருந்தால், அதிகரணஸாராவளியில் "பாஷ்யாதிக்ரந்த லேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத" என்று முடியும் சுலோகத்தினால் நடாதூர் அம்மாளுடைய தத்வஸாரத்திலுள்ள "ஆதாவீச்வர தத்தயைவ புருஷ:" என்கிற ச்லோகத்தைக் கண்டித்தது போல ப்ரபன்ன பாரிஜாதத்தையும் கண்டித்தே யிருப்பர்.

இந்த ஸந்தர்பத்தில் "பிராட்டியின் விபுத்வோபாயத்வ ஸமர்த்தந ப்ரகரணத்தில்" என்று எழுதுகிறார் மதுராந்தக நண்பர். இது மிக வியக்கத்தக்க வாக்கியம். ஸ்ரீபெரும்பூதூர் ஸம்பாஷணையினால் வெளிவந்த தத்வார்த்தம் ஒரு நாளும் மறையாது. (இவ்விதழிலேயே வெளிவந்துள்ள திருநாங்கூர் வித்வான் ஸ்வாமியின் வ்யாஸத்தில் நமது மதுராந்தக நண்பருடைய விடைவார்த்தைகள் உதாஹரிக்கப்பட்டிருப்பது கண்டும் உலகம் உண்மை உணரும்.) பிராட்டிக்கு விபுத்வமோ, உபாயத்வமோ ஒரு பூர்வாசார்யராலும் கொள்ளப்படவில்லை: இதெல்லாம் முடிந்து போனவற்றை மீண்டும் மீண்டும் கிளப்பிக் கிளப்பிப் பரிபவப் படுவதேயாகும். சோளஸிம்ஹபுரம் தொட்டையாசாரியர் ஸ்வாமி, பஞ்ச விஜயங்கள் அருளிச் செய்து மஹோபகாரம் செய்தவர். இந்த மதுராந்தக நண்பர், தாமும் அவரைப் போலே விஜயக்ரந்தம் பணித்ததாகவும் அது விஜயம் பெற்றுவிட்டதாகவும் பறைசாற்றுவது பரிஹாஸ்யம். இவர் எழுதுகிற எழுத்து எதுவும் எழுதின மசி உலர்வதற்கு முன்னே மாய்ந்து கொண்டிருப்பதை அறியாதார் இல்லையே! இன்னமும் எழுதுகிறார் மதுராந்தகர்—"எங்களாழ்வானுக்கு சிஷ்ய க்ருத்யத்தோடு புத்ர க்ருத்யமான சரம கைங்கர்யம் செய்து அவர் பக்கலிலே ஸர்வார்த்த க்ரஹணம் பண்ணியவர் நடாதூரம்மாள்" என்று. இதை எதற்காக எழுதுகிறாரோ தெரியவில்லை. எங்களாழ்வான் பூர்வசிகா ஸ்ரீவைஷ்ணவோத்தமர். அந்த

வகுப்பில் ஸூர்ய சந்த்ர காலம் முதல் தென்கலைத் திருமண்காப்பணிந்தவர்களே உள்ளார்கள். (மேல் நாட்டில் மண்டயத்தார் என்ற வகுப்பினர் போல) நடாதூரம் மாளும் அந்தத்திருமண் காப்பையே அணிந்திருந்தவர் என்பதைத்தான் இவர் ஸ்தாபித்தாராகிறார். வேதாந்த தேசிகன் சதுச்லோகீ பாஷ்யத்தில் (இரண்டாவது ச்லோகத்தில்) எங்களாழ்வான், அம்மாள், ச்ருதப்ரகாசிகா பட்டர் ஆகிய மூவரையும் அடைவே எடுத்து அருளிச் செய்திருக்கிறார். எதற்காக எடுத்திருக்கிறார் தெரியுமோ! தெரிவிக்கிறோம் கேண்மின். அங்கு தேசிகன்தாம் "அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணம் அநுக்ரஹே" என்று ஒரு காரிகையிட்டு இதற்கடுத்த படியாக அவ்வாசிரியர்களை ப்ரஸ்தாவித்துள்ளார். இந்தக் காரிகையின் பொருள் என்ன வென்றால் சேதநர்களின் நல்வினை தீவினைகட்குத் தக்கபடி பலனளிப்பவன் எம்பெருமானே. அதாவது அநுக்ரஹத்தைச் செய்வதோ நிக்ரஹத்தைச் செய்வதோ இவை எம்பெருமானுடைய க்ருத்யமே. இதில் பிராட்டிக்கு எவ்விதமான அந்வயம் என்றால், அப்பெருமான் தீவினைக்குத் தக்கபடி நிக்ரஹிக்கும் போது "உசிதை: உபாயை: விஸ்மார்ய" என்று பட்டர் அருளிச் செய்தபடியே அந்த நிக்ரஹத்தை விலக்கி விடுவள். அப்பெருமான் அநுக்ரஹோந்முகனானபோது அவ்வநுக்ரஹத்தைப் பிராட்டி மேன்மேலும் ஓங்கி வளரச் செய்வள்—என்பதாம். இதற்கு அடுத்தபடியாக (சதுச்லோகீ பாஷ்யத்தில்)

> "உக்தம் ச ஸ்ரீவிஷ்ணுசித்தை: கத்யவ்யாக்யாநாரம்பே *மாத்ருத்வைகரூபாம் ச்ரியம் ப்ரபத்யதே. மாதா ஹி ஹிதாதபி புத்ரஸ்ய ப்ரியமேவ பச்யதி, பிதா து உபயம் பச்யதி; அத: தண்டதரத்வஹீநதைவாவலம்பநமஸ்யாம் தசாயாம் ஆஸ்தி இதி. அத்ர வரதகுருபதேசாநுஸாரிபி: வ்யாஸார்யை: ச உக்தம்* ப்ரதாபோஷ்மல பித்ருத்வதுராஸத பகவத் ஸமாச்ரயண ஸித்தயே புருஷகாராநுப்ரவிஷ்ட வாத்ஸல்ய நிர்பர லக்ஷ்மீ ஸமாச்ரயணம் ஸ்ரீமச்சப்த விவரண முகேந அபிதீயதே இதி"—என்றுள்ளது.

இந்த ஸ்ரீஸூக்தி மாலிகையில் எங்களாழ்வான் ஸாதித்திருப்பதாக தேசிகன் உதாஹரித்துள்ள வாக்கியத்தினால் பிராட்டிக்குப் புருஷகாரத்வம் மட்டுமே தேறுகின்றது. இதற்கு விருத்தமாக ப்ரபந்ந பாரிஜாதத்தில் ஏதேனும் இருந்தால் அதுகொண்டே அது அம்மாள் க்ருதியன்று என்று அறுதியிடத் தட்டில்லை. மேலே ச்ருதப்ரகாசிகா பட்டருடைய ஸ்ரீஸூக்தியை உதாஹரிக்கும் போது "வரதகுருபதேச அநுஸாரிபி: வ்யாஸார்யை:" என்கிறார் தேசிகன். இந்த விசேஷணம் எதற்காக? வ்யாஸார்யர் அப்ரஸித்தரா? அவர் நடாதூரம்மாள் பக்கலில் உபதேசம் பெற்றவர் என்பது அப்ரஸித்தமா? ஆனாலும் இந்த விசேஷணமிட்டது வ்யாஸார்யர் அருளிச்செய்ததாகக் காட்டப்படுகிற அர்த்தம் ஸம்ப்ரதாய பரம்பராப்ராப்தம் என்று மூதலிக்க வேண்டியேயாம் இதையெல்லாம் இன்றாக நாம் எடுத்துக் காட்டுகிறோமல்லோம். ஒன்றுக்கும் வாயைக் கையைத் திறக்காமல் வாளாவிருந்துவிட்டு இப்போது பாமரப்ரதாரணமாக எழுதுவது பாமரர்களையும்ப்ரதாரணம் செய்யமாட்டாதென்று புநர்வஸு பத்ராதிபர் தெளியக் கடவர்.

# ஆறிய பெரிய ஆறு வார்த்தை

மதுராந்தக மஹாஸ்வாமிந்! திருக்கச்சிநம்பியாறுவார்த்தை போலே ஒரு ஆறு வார்த்தை தேவரீர் ஸன்னிதியிலே ப்ரேமத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். குறிக்கொண்டருள வேணும்.

1. ப்ரதாபருத்ரீயத்தில் ஒரு ச்லோகம். ''பரிஹாஸேபி அநௌசித்யம் ஸ்வப்நேபி அந்யவதூரகதாம்.........காகதீந்த்ரோ நம்ருஷ்யதி'' என்பதாக. இதே போல ''விப்ரலம்பே வ்ருதா ச்ராந்திம் விஷமார்த்தேஷு வாஸநாம், ம்ருதஸஞ்ஜீவநே மோஹம் மதுராந்தோ நம்ருஷ்யதி'' என்றொரு ச்லோகம் தேவரீர் விஷயமாக அவதரிக்க வேணும். என்றைக்கோ உயிரிழந்தவற்றுக் கெல்லாம் இன்னமும் உயிரிருப்பதாகக் காட்டி பாமர ப்ரதாரணத்திலே ருசி கொள்ள வேண்டா.

2. ஐம்பது வருஷங்களுக்கு மேலாக அடியேனுக்கும் தேவரீருக்கும் நேசமுள்ளது. ''ப்ரியா து ஸீதா ராமஸ்ய தாரா: பித்ருக்ருதா இதி, குணத்ரூப குணைச்சாபி ப்ரீதிர் பூயோப்யவர்த்தத.'' என்கிற ஸ்ரீராமாயண ச்லோகம் தேவரீருக்குத் தெரியுமே. நேற்று ஆடிமாதம் வரையில் அடியேனுக்குத் தேவரீரிடத்தில் விச்வாஸம் ஸாதாரணமானது. ஸ்ரீபெரும்பூதூரில் (ஆவணிமாதத் தொடக்கத்தில்) தேவரீரோடு நேர்ந்த ஸம்பாஷணைக்குப்பிறகு விளைந்த விச்வாஸம் பரம ப்ராமாணிகரென்கிற உணர்ச்சியினுலாதலால் ''குணத்ரூப குணைச்சாபி ப்ரீதிர் பூயோப்யவர்த்தத'' என்கிற கணக்கிலே அது மிகமிக வளர்ந்ததாயிற்று. இந்த வளர்ச்சிக்கு பங்கம் விளைக்கவேண்டா.

3. தேவரீர் இளமையில் ''கிட்டாதாயின் வெட்டென மற'' என்றோதியிருக்குமே. பழுதாகக் கூடிய ஆசை என்று தெரிந்த பின்பும் அந்த ஆசை தொடர்ந்து செல்லமாட்டாது விவேகிகளுக்கு. ''ஆகிலும் ஆசை விடாளால்'' என்கிற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியை இங்குக் காட்ட வேண்டா. தேவரீருடைய ஸம்ப்ரதாய ஸூதா என்றைக்கோ மண்மூடிப்போய் விட்டிருக்க இன்னமும் அதை ப்ரஸ்தாவிப்பது பரிஹாஸ்யமென்று துணிந்து அதனை அறவே மறந்தொழிவதே நன்று.

4. ''அவர்கள் அப்படி கலங்குவர்கள், இவர்கள் இப்படி கலங்குவர்கள் அந்தக் கலக்கத்தை சமிப்பித்தோம், இந்தக் கலக்கத்திற்குப் பரிஹாரம் சொல்லுகிறோம்'' என்றுற்போன்ற வார்த்தைகள் மலிந்ததான வொருநூல் கலக்கமே வடிவெடுத்தது. அதனை நம்பி ப்ராமாணிகத்வத்தை இழக்க வேண்டா. அது ''நிஜ முக தோஷம் நிர்மலேஷ்வபி தர்ப்பணேஷு ஸமர்ப்பயந்தி'' என்கிற ஸங்கல்ப ஸூர்யோதய ஸூக்தியை மூதலிப்பதாமத்தனை. அதுபற்றி ''அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதம் அவிஜாநதாம்'' என்றது ஸத்யமே.

5. சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் மோக்ஷப்ரதான ஸங்கல்பத்தைப் பற்றின ப்ரஸ்தாவத்தில் ''யதாப்ரமாணம் பவது'' என்றும், மேலே ''பஞ்சஸ்

வேதேஷு பக்ஷேஷு கச்சிதேக: ப்ரமாணவாந்'' என்றும் மிகவழகிய நிர்ணயம் காட்டித் தீர்க்கப் பட்டது. அதற்கு மேல் ''ஸபத்நீகஸ்ய ஸாம் ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்ட்டிதம்'' என்றதுண்டே இது ஸாரதமம். எவ்வித மான ஏற்றம் சொல்லுவதானாலும் திவ்யதம்பதிகளுக்குச் சொல்லவேணுமே யொழி யப் பிராட்டிக்குத் தனிப்படச் சொல்லலாகாதென்று கல்வெட்டு செய்தருளினரா யிற்று. ''லக்ஷ்மீபதிர் விபு:'', ''லக்ஷ்மீபதி: மோக்ஷப்ரத:'' என்றல்லது வேறு வித மாகச் சொல்லாதீர்களென்று திடமான கட்டளை யிட்டிருக்க அதைத்தள்ளி ஏதுக்கு இன்னமும் மன்றுடுகின்றீர்கள்? ''சர்க்கரையை க்ஷீரான்னத்தில் சேர்த்து உண் ணும், உப்பைப் பொங்கலில் சேர்த்து உண்ணும்'' என்றால் தனித்தனியாகத்தான் உண்பேன் என்று பிடிவாதம் பிடிப்பாருண்டோ?

## அபூர்வார்த்த ரத்னநிதி

(நிகமனம்)

6. பல மாதங்களாக ஸ்ரீ ராமாநுஜனில் வெளிவந்து கொண்டிருக்கிற அபூர் வார்த்த ரத்னநிதியின் தொடர்ச்சியான ஒரு பகுதி இவ்விதழில் வெளிவருகின்றது. அதில் முடிவான நிதி ''ஞானங்கனிந்த நலங்கொண்டு'' என்ற மகுடமுடையது. திருவரங்கத்தமுதனார் எம்பெருமானுடைய மோக்ஷப்ரதத்வத்திற்காட்டில் எம் பெருமானுருடைய மோக்ஷப்ரதத்வம் மிகச் சீரியதென்கிறார். இதேபோல் பிராட்டிதிறத்திலும் சொல்லுமளவில் ஒரு விவாதமும் விளையாது. தேசிகன் கோதா ஸ்துதியில் ''வாசாலயந்தி வஸுதே! ரஸிகாஸ் த்ரிலோகீம் ந்யூநாதிகத்வ ஸமதா விஷயைர் விவாதை:'' என்றருளிச் செய்தது எவ்வளவு சுவை மிக்கது தெரியுமா? இங்கு 'விபுதா:' என்னமல் 'ரஸிகா:' என்றதன் சுவடு அறிவீரோ?

(ச்லோகம்) விலஸந்தி மஹாப்ராஜ்ஞா: பஞ்சஷா மதுராந்தகே,
தேஷாம் யச: காமயதாம் அஸ்மதீயஸ் ஸுஹ்ருந்மணி:.

முற்றிற்று.

# போலி வைணவர் பொய்யுரை மறுப்பின் நிகமனம்

ஸ்ரீராமாநுஜன் 300, 301, 302, ஆகிய மூன்றிதழ்களில் 'போலிவைணவர் பொய்யுரை மறுப்பு' என்ற மகுடத்தின் கீழ் நாம் வரைந்துள்ள விஷயங்களை ஆர ஆமர ஆராய்ந்து பார்த்த பல பெரியார்கள்—பலநூற்றுக் கணக்கான பெரி யார்கள்—நமக்கெழுதியுள்ள கடிதங்கள் நூற்றுக்கணக்கானவை. அவற்றை நாம் வெளியிட்டால் நூறு பக்கங்களுக்கு மேற்போகும். ஒவ்வொருவரும் முக்கிய மாகத் தெரிவித்த விஷயம் என்னவென்றால் ''பொருள் படுத்தத் தகாத வற்றையும் பொருள்படுத்தி ஸ்ரீராமாநுஜனின் அருமையான அவகாசத்தைப் பாழ் படுத்தலாமோ? அந்த அபத்தச் சுவடியை வாசித்துப் பார்ப்பவர்களுக்கு அதில் இன்னது சொல்லிற்றென்று தெரிந்துகொள்ள முடியாதபடி சொற்பிழை களும் பொருட் பிழைகளும் அச்சுப்பிழைகளும் மலிந்திருப்பது கண்டு ஏசாதா

ரில்லையே! தேவரீர் எடுத்து விளக்குவது கொண்டே அதில் இத்தனை தூஷணங்களுள்ளன வென்று தெரிந்து கொள்ளலாகிறது. 'அதை நீர் வாசித்தீரோ!' என்று யாரைக் கேட்டாலும் 'அந்தத் தலைவேதனையை விவேகிகள் பார்ப்பரோ?' என்றே ஒவ்வொருவரும் சொல்லுகிறார்கள்........'' என்று இத்தகைய வாசகங்களே ஒவ்வொரு கடிதத்திலும் மலிந்துள்ளன. ஸ்ரீமதுபயவே. திருநாங்கூர் வித்வான். எம்பார். வட்டமணி. ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி சோழநாட்டிலுள்ள பல நிருபகர்களின் கையெழுத்தையும் வாங்கி மகஜர்நாமா போல் நமக்கனுப்பியிருக்கும் கடிதம் மட்டும் இங்கு வெளியிடலாகிறது..............................
......ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதியில் அடியோங்களுடைய விண்ணப்பம். ஸ்ரீராமாநுஜனில் அருமைபெருமை வாய்ந்த விஷயங்களினிடையே போலிவைணவரின் பொய்யுரை மறுப்பும் இடம் பெறவேண்டியது அவசியமோ? ஸ்ரீராமாநுஜன் முந்நூற்றிரண்டாவது இதழில்,

'உலகில் வெட்டவெளிச்சமாகவே நாஸ்திக வாதம் செய்பவர்களை எங்கும் காண்கிறோம். அன்னவர்களின் வேஷபாஷைகள் இருக்கும் படியையும் கண்டுவருகிறோம். இப்போலி வைணவரும் அப்படியே யிருந்துவிட்டால் விசாரமில்லை. பட்டர் ஸஹஸ்ர நாமபாஷ்யத்தில் ஓரிடத்தில் ஆச்சரியமாக ஒரு ஸ்ரீஸூக்தி ஸாதித்துள்ளார். (அதாவது) "ந தே நிரஸநீயா:, அபி து சோசநீயா:" என்று. இதன் பொருள் என்னவென்றால், தத்வத்தை மனமார அறிந்து வைத்தும் துர்வாதம் செய்பவர்கள் கண்டிக்கத்தக்கவரல்லர். ஐயோ! இவர்களின் தலைவிதி இப்படியாயிற்றே! என்று அழுது முடிக்கவேண்டியதத்தனை—என்பதாம். இந்த ஸ்ரீஸூக்தியை முதன் முதலாக உலகுக்கு எடுத்துக் காட்டியது நாமே. இப்போது இந்த ஸ்ரீஸூக்தியைப் பலர் நமக்கு நினைவூட்டி "எதற்காக இந்த சுஷ்ககண்டன ப்ரவ்ருத்தி?" என்று கேட்டு வருகிறார்கள்'' என்று தேவரீர் தாமே எழுதிவிட்டு உடனே 'தொடரும்' என்றிட்டிருப்பது பொருத்தமாக இல்லையே! இதுகாறும் தேவரீர் எழுதியுள்ளவற்றில் சிலசில வாக்யராசிகளை எடுத்துக் காட்டுகிறோம். "பகவானுக்கே அஸஹ்யமான அபசார வகையில் (போலி வைணவர்) எழுதியுள்ள சில வாக்யங்களை அநுவதிக்கவும் கூசுகிறோம்..............ஒன்றையும் ப்ரமாணமாக்க கொள்ளாமல் கடைவீதிப்புராணம் என்று சொல்லும் முறையில் மனந்தோன்றின படியெல்லாம் எழுதுமவர்களுக்கு எவ்வளவுதான் சொல்லுவது? (ஸ்ரீ ராமாநுஜன் 300) *தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்றதிருமழிசைப் பிரானருளிச்செயலின்படி போதுபோக்கி வரும் நமக்கு இப்போலி வைணவரின் பொய்யுரைகளை ஆராய்ச்சி செய்வதில் போதைப்போக்குவது மிகமிக வருந்தத் தக்கதும், வெறுக்கத் தக்கதுமே ஆகின்றது. ஒரு ஆசார்யரையும் பேணாமல் ஒரு ப்ரமாணத்தையும் சாராமல் கண்டவா பிதற்றித் திரிகின்றவர்களின் பேத்தல்களை *கலையறக்கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோ தான்* என்ற திருமாலைப் பாசுரப்படி கண்ணிலும் செவியிலும் கொள்ளாதே கிடப்பதுதான் ஸ்வரூபாநுரூபம்...........................................
ஸ்ரீவசனபூஷணத்தில் *கேவல நாஸ்திகனைத் திருத்தலாம்; ஆஸ்திகநாஸ்திகனை ஒரு நாளும் திருத்தவொண்ணாது* என்றார் பிள்ளைலோகாசார்யர். அவரினும் முற்பட்ட

பர்த்ருஹரிகவி ''அஜ்ஞஸ்ஸுகமாராத்ய: ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:, ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் நரஞ்ஜயதி'' என்றார். திருமழிசைப் பிரான் தமது திருவந்தாதியில் எம்பெருமானுக்கு மற்று யாருமிடாதவொரு விசேஷணமிடுகிறார், *நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்* என்று. நூலாட்டி கேள்வனார் என்றது ச்ரியப்பதி என்றபடி. நூல்வலையில் பட்டிருந்த என்றது சாஸ்த்ர வரப்புக்குக் கட்டுப்பட்டவன் என்றபடி. *ச்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா* என்று தானே சொன்னபடி தன்னுடைய ஆஜ்ஞையான சாஸ்த்ரங்களுக்குத் தானும் கட்டுப்பட்டிருக்கிறான் அவன். உலகத்திலுள்ள நாநாமதஸ்தர்களை விட்டுவிடுவோம். ஸ்ரீவைஷ்ணவமதஸ்தர்களை மட்டும் கொள்வோம். ஆளவந்தார், ஸ்ரீராமாநுஜர், கூரத்தாழ்வான், பட்டர் என்னுமாசார்யர்களின் ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் காட்டினால் கை கூப்பாத ஸ்ரீவைஷ்ணவர்களில்லை. ''ஆளவந்தார் ஸாதித்தாலென்ன? உடையவர் சொன்னாலென்ன!'' என்கிற ஸ்ரீவைஷ்ணவர் இது வரைக்கும் உதிக்கவில்லை. பட்டர்க்குக் கீழ்ப்பட்ட ஆசார்யர்களில் தேசிகன் ஸ்ரீஸூக்தியென்றால் விசேஷ ஆதரம் காட்டும் வகுப்பினரும், பிள்ளைலோகாசார்யர், மணவாள மாமுனிகள் ஸ்ரீஸூக்தியென்றால் அப்படியே ஆதரிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களும் உலகில் பரவியுள்ளார்கள். ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் த்ருணீகரிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களை இதுகாறும் நாம் கண்டதில்லை. கண்டால் ''நீ யவர்பால் சென்றணுகக் கூசித்திரி'' என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தை யநுஸந்தித்து கடக்க நிற்பதே உண்மை ஸ்ரீவைஷ்ணவர்களின் கடமையாகும்.........................................
........ஆகமப்ராமாண்யம் ஆளவந்தார் ஸாதித்ததன்று; கத்யத்ரயம் ராமாநுஜர் ஸாதித்ததன்று'' என்று மனம்போனபடியெல்லாம் எழுதிவைத்திருக்கிற விவரைப் பொருள் படுத்தி நாம் எழுதுவது தகுமா? ஒரு ப்ரமாணத்திற்கும் கட்டுப்படாதவரை எந்த ப்ரமாணம் கொண்டு திருத்துவது? (ஸ்ரீ ராமாநுஜன் 302) இவைகளுக்கு அவர் ப்ராமாணிகமான பதில் எழுதி வெளியிட்டாலன்றோ மேன்மேலும் தேவரீர் எழுதிப் போகவேணும். அவர் தம்மை ஆஸ்திகரென்கிறாரா? நாஸ்திகரென்கிறாரா? ''இவற்றின் புறத்தாளென்றெண்ணே'' என்று நம்மாழ்வார் ஸாதித்தபடி ப்ரபஞ்சபஹிர்ப்பூதரென்கிறாரா? எந்த நூலை அவர் ப்ரமாணமாகக் கொள்ளுகிறாரென்பதை அவர் தெரிவிக்க வேண்டாவா? ஸர்வாத்மநா பொருளற்ற அபத்தக் களஞ்சியத்தைப் பொருள் படுத்தி மேன்மேலும் எழுதுவதை நிறுத்திக் கொள்ள வேணுமென்று வினயமுடன் வேண்டிக் கொள்கிறோம்.
..........................................................................................

★ ★ ★ ★

இவ்வகையில் பலபல பெரியார்கள் நேரிலும் கடிதமூலமாகவும் அடிக்கடி தெரிவித்து வருவதனால் அந்தப் பொய்யுரை மறுப்பை நிறுத்திக் கொண்டோம். அப்பொய்யுரைச் சுவடியில் உள்ள தவறான விஷயங்களைக்கண்டு கலங்குமவர்கள் யாரேனும் 'இன்ன விஷயத்திற்கு நாங்கள் விடை விரும்புகிறோம்' என்று நமக்குத் தெரிவித்தால் அல்லது அந்தப் போலிவைணவரே தெரிவித்தால் விரும்பும் விஷயங்கட்கு விடையிறுக்கத் தடையில்லை.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

——:X:——

# அபூர்வார்த்த ரத்னநிதி

(முன் தொடர்ச்சி)

"அபூர்வார்த்த ரத்னநிதி" என்னும் மகுடத்தில் உயிரெழுத்து வரிசையில் எண்பத்து நான்கு அபூர்வார்த்தங்கள் வெளியிடப்பட்டன. இனி க, கா .........முதலிய எழுத்து வரிசையில் அபூர்வார்த்தங்கள் கேண்மின்.

**85. கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ** நாச்சியார் திருமொழியில் ஏழாவது பதிகத்தின் தொடக்கமிது. கீழ்ப்பதிகத்தில் பாட்டுத்தோறும் "கனாக் கண்டேன் தோழீநான்" என்று சொல்லி நின்றாள். கனாக் காணும் போது மெய்யான அனுபவமென்றே தோன்றி யிருந்தது. கண்விழித்தவாறே அது கனவென்று தெரிந்து வருந்தத் தொடங்கினாள் ஆண்டாள். எம்பெருமான் மெய்யான அனுபவம் கொடாதே இப்படிக் கனவைக் காட்டியே ஒவ்வொருவரையும் ஸமாதானப்படுத்துகிறானே என்று ஆலோசித்தாள். பாஞ்சஜன்யமென்கிற சங்கு எம்பெருமானுடைய திருப்பவளத்தை நித்யானுபவம் செய்துகொண்டு களிப்பதைக்கண்டாள். அதனுடைய பாக்கியமே பாக்கியம் தான் என்று உகந்து அதனோடு உசாவிப் போது போக்குகின்றாள் இப்பதிகத்தில். ஒவ்வொரு பாசுரமும் பேரின்பமே வடிவெடுத்ததாய் இருக்கும். "திருச்சங்காழ்வானே! கண்ணபிரானுடைய திருப்பவளத்தின் சுவையையும் பரிமளத்தையும் நித்யானுபவம் செய்கின்ற உன்னைக் கேட்கின்றேன். அத்திருப்பவளம் பச்சைக் கருப்பூரம் போல் பரிமளிக்குமா? தாமரைப் பூப்போல் பரிமளிக்குமா? ஓர் உவமையையும் சகியாமல் விலக்ஷணமாகத் தித்திக்குமா? சொல்லப்பா" என்கின்றாள்.

**86. காப்பாருமில்லை கடல்வண்ணா உன்னை** பெரியாழ்வார் திருமொழியில் இரண்டாம் பத்தில் மூன்றாம் பதிகத்தின் முதற் பாட்டிலுள்ளது இது. யசோதைப் பிராட்டி கண்ணனைக் காதுகுத்த அழைக்கும் பதிகமிது.

கண்ணனோ தாய்க்கு அடங்காமல் தெருவிலே திரிகிறான். அவனை அழைக்கிற இவள் "காப்பாருமில்லை கடல்வண்ணா உன்னைத் தனியே போய் எங்கும் திரிதி" என்கிறாள். இதே பதிகத்தில் மேலே ஆறாவது பாட்டில் "கண்ணாவென் கார்முகிலே கடல்வண்ணா காவலனே முலையுணாயே" என்கிறாள். இங்குக் 'காவலனே' என்றது ஸர்வரக்ஷகனென்றபடி. காக்கவல்லவன் காவலன். கண்ணனை ஸர்வரக்ஷகன் என்று தெரிந்து கொண்டிருந்தும் "காப்பாருமில்லை கடல்வண்ணா உன்னை" என்கிறாள். அவனுடைய கடல் வடிவைக் கண்டவாறே வடிவழகில் ஈடுபட்டு அவனையும் மறந்து பேசுகிறபடி. அடியேனுடைய ஏழாவது வயதில் திருத்தகப்பனார் பெரியாழ்வார் திருமொழி சந்தை சொல்லித்தருகிறார். இப்பாட்டைச் சொல்லும் போது விக்கிவிக்கி அழுகிறார். பக்கத்தில் உட்கார்ந்திருந்த என் பிதாமஹி "என்ன, ரங்கசாமி, என்ன ரங்கசாமி, விக்கிவிக்கி அழுகிறாயே, என்ன?" என்றாள். அவளுக்கு விடை கூறமுடியாமல் பின்னையும் விக்கி அழுகிறார். சிறிது நேரம் பொறுத்து

ஏதோ ஸாதித்தார். அதை அப்போது கிரகிக்க எனக்குப் பருவமில்லை. ஸர்வ ரக்ஷகனை நோக்கி "காப்பாருமில்லை கடல் வண்ணா உன்னை" என்று சொல்லுவது என்ன பரிவின் மிகுதி! என்று அவர் உள்குழைந்தனர் போலும்!

**87. கிடந்தநாள் கிடந்தாய் எத்தனை காலம் கிடத்தி** ஆழ்வார் திரு நகரியைச் சேர்ந்த நவ திருப்பதிகளுள் ஒன்றான திருப்புளிங்குடிக்கு நம்மாழ்வார் இட்டருளின பதிகத்தில் மூன்றாம் பாட்டு இது. (9—2—3) இப்பதிகத்தில் ஒவ்வொரு பாசுரமும் நெஞ்சை உருக்குமது. இத்தலத்து எம்பெருமானுடைய ஸேவையோ அற்புதமானது. ஆச்சர்யமானது. அப்பெருமானுக்கு ஏற்ற பதிகமிது. அர்ச்சாவதாரநிலை என்றைக்கு மொருபடிப்பட்டே யிருக்கு மென்பதும் அதுகுலைக்க வொண்ணாததென்பதும் ஆழ்வார் அறியாததன்று. ஸம்ஸாரம் கிழங்கெடுத்தால் அல்லது பேரேன் என்று கிடக்குமிடமன்றோ அர்ச்சை. அதை அறியாதவரா ஆழ்வார்! அறிந்து வைத்தும் "கிடந்த நாள் கிடந்தாய் எத்தனை காலம் கிடத்தி" என்கிறார். நாங்களெல்லாரும் இரவில் படுப்பதும் காலையில் எழுவதுமாக இருக்கிறோமே, நீ என்றைக்கு சயனித்துக் கொண்டாயோ அறியோம். இப்படி ஏகரீதியாக சயனித்திருக்கும்படி என்ன சிரமமோ அறியோம் என்கிறார். திருமழிசைப் பிரான் திருக்குடந்தை ஆராவமுதனை நோக்கி "நடந்தகால்கள் நொந்தவோ" என்கிற பாசுரத்தில் 'எழுந்திருந்து பேசு' என்றார். இவ்வாழ்வார் திருப்புளிங்குடிப் பெருமானை நோக்கி உன் தாமரைக் கண்கள் விழிக்கவேணு மென்றும் 'நீயும், தேவியாரும் எழுந்து வீற்றிருக்கவேணு' மென்றும் 'மூவுலகும் தொழ வீற்றிருக்கவேணும்' என்றும் இரக்கிறார். கீழே எட்டாம் பத்தில் மூன்றாம் பதிகத்தில் "கொடியார் மாடக்கோளூரகத்தும் புளிங்குடியும் மடியாதின்னே நீ துயில் மேவி மகிழ்ந்ததுதான் அடியாரல்லல் தவிர்த்த வசைவோ அன்றேலிப்படிதான் நீண்டு தாவிய வசைவோ பணியாயே". என்ற பாசுரம் இங்கே கூட்டி அனுபவிக்கத் தக்கது.

**88. கீழைமேலை வடக்கிலவை புறம்பாகத்தன்பற்று உள்ளசல்:—** இது ஆசார்ய ஹ்ருதய சூர்ணிகை. வடிக்கட்டின சிறந்ததொரு சாஸ்த்ரார்த்தத்தை அற்புதமாகத் தெரிவிக்கும் சூர்ணை இது. நாச்சியார் திருமொழியில் (12—2) "நாணியினியோர் கருமமில்லை நாலயலாரும் அறிந்தொழிந்தார்" என்ற விடத்தில் நாலயலார் என்றது யாரை? திருவாய்மொழியில் "அயற்சேரியுள்ளாரும் எல்லே". (6—6—4) என்றவிடத்து அயற்சேரியார் என்றது யாரை? என்னுமிரண்டு கேள்விகளுக்கு விடையாகக் கீழே "நாலயலார் அயற்சேரியார் உபாய சதுஷ்டயாந்தர் யாமித்வபரர்" என்ற சூர்ணை அவதரித்தது. அதில் கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்தி யோக நிஷ்டர்களை நாலயலாராகத் தெரிவித்தாராயிற்று. ப்ரபத்தி பரரையும் அயலாராகச் சொல்லலாமோ என்கிற கேள்வி எழ அதற்குப் பரிஹாரமாக இந்த சூர்ணை அவதரிக்கின்றது. இந்த சூர்ணையின் ஸாரமான தாத்பர்யமாவது:— கர்மஜ்ஞான பக்தியோகங்கள் பாஹ்ய சத்ருக்கள். ஸ்வகத ஸ்வீகார ரூபமான ப்ரபத்தி ஆந்தர சத்ரு என்பதாம். சூர்ணையின் முடிவிலுள்ள 'உள்ளசல்' என்கிற பதத்தில் 'அசல்' என்பது இரண்டிடத்திலும் அந்வயிக்கும். புறம்பசல், உள்ளசல் என்றபடி. புறம்பசல் என்றது பாஹ்ய சத்ரு. உள் அசல் என்

றது ஆந்தரசத்ரு. 'கீழை மேலை வடக்கிலவை' என்கிற சொல்தொடர் கர்மஜ்ஞான பக்தியோகங்களை எங்ஙனே காட்டுமென்னில், இது தான் ஆச்சர்யமான ஸ்ரீஸூக்தி. கண்ணபிரானுடைய சேஷ்டைகளைச் சொல்லி யனுபவிக்கிற ஆழ்வார்கள் கீழை யகத்து ப்ரஸ்தாவமும் மேலையகத்து ப்ரஸ்தாவமும், வடக்கிலகத்து ப்ரஸ்தாவமும் செய்துள்ளார்கள். கீழையகத்தின் ப்ரஸ்தாவம் குலசேகராழ்வார் பாசுரத்திலும் திருமங்கையாழ்வார் பாசுரத்திலும் வந்துள்ளது. குலசேகராழ்வார் (6—2) 'கெண்டையொண்கண் மடவாளொருத்தி கீழையகத்துத் தயிர் கடையக் கண்டு ஒல்லை நானும் கடைவனென்று.........தண்டயிர் நீ கடைந்திட்ட வண்ணம் தாமோதரா மெய்யறிவன் நானே'' என்றருளியுள்ளார். திருமங்கையாழ்வார் திருமொழியில் (10—7—1) ''தானுமோர் கன்னியும் கீழையகத்துத் தயிர் கடைகின்றான்போலும்'' என்றார். தயிர் கடைகை என்பது ஜாத்யுசித கர்மமாகை யாலே இது கர்ம யோகத்தைச் சொல்லுவதாகக் கொள்ளப்பட்டது. இனி மேலை யகத்து விஷயம். மேலையகத்தில் கண்ணன் செய்த செயல் ஒன்றும் சொல்லப்பட வில்லை. ஆனாலும் ''மேலையகத்து நங்காய் வந்து காண்மின்கள்'' என்றும் ''மேலை யகத்தே நெருப்பு வேண்டிச் சென்று'' என்றும் மேலையகத்து ப்ரஸ்தாவம் பாசுரங் களில் வந்துள்ளது. ''வந்து காண்மின்கள்'' என்றதனால் காட்சியாகிற ஜ்ஞாநம் தெரிவிக்கப்படுகிறது. ''மேலையகத்தே நெருப்பு வேண்டி'' என்றதில் 'நெருப்பு' என்றதனால் ''ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே'' என்ற கீதையின்படி ஜ்ஞாநமே தெரிவிக்கப்படுகிறது. ஆக இவற்றால் ஜ்ஞானயோகம் சொல்லிற்றாயிற்று. இனி வடக்கிலகத்தின் விஷயம். பெரியாழ்வார் திருமொழி யில் (3—1—2) ''வடக்கிலகம் புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாள் ஒரு கன்னியை வேற்றுருவம் செய்துவைத்த வன்பா!'' என்றதனால் விகாரம் கொள்ளு கையான பக்தியோகம் தெரிவிக்கப்பட்டது. ஆகவிவற்றால் கர்ம ஜ்ஞாந பக்திகள் தெரிவிக்கப்பட்டதாக அருளிச்செய்தவிது அருளிச்செயற் கடலில் ஆழ்ந்தவர்கட்கே நிலமானது. இவை மூன்றும் ஸித்தோபாயபரர்க்கு பாஹ்ய சத்ருக்களாயிருக்கும். தன்பற்று உள் அசல் என்பது தெரிந்ததே. இங்கு ஒரு விநோதோக்தி கேண்மின். ஆழ்வார் திருநகரியில் கீழைத்திருமாளிகை, மேலத் திருமாளிகை, வடக்குத் திரு மாளிகை என்கிற வ்யபதேசம் நெடுநாளாக வுண்டு. தெற்குத் திருமாளிகை என்கிற வ்யபதேசம் என்றைக்குமில்லை. ஆழ்வார் திருநகரியில் அடியேன் ஆசார்ய ஹ்ருதய ப்ரவசநம் செய்தபோது இதை விஜ்ஞாபிக்க அங்குள்ளார் எல்லாரும் ரஸித்தார்கள்.

<u>89. குழாங்களாயடியீருடன் கூடி நின்றாடுமினே:—</u> திருவாய்மொழியில் (2—3—11) பலச்ருதிப் பாசுரமிது. இதுவொரு விலக்ஷணமான பலச்ருதி. இங்கு ஈட்டில் அருளிச்செய்ததொரு திவ்யஸூக்தி நிச்சலும் அநுஸந்திக்கத்தக்கது. அதாவது:—''அவன் பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்கிற நீங்கள் நால்வரிருவர் இங் கிருக்கும் நாலு நாளும் த்யாஜ்யமான அர்த்த காமங்களைப்பற்றிச் சீறு பாறென் னாதே நம் பெரியகுழாத்திலே போய்ப் புகுமளவும் ஒருமிடறாக அநுபவிக்கப் பாருங் கோள்'' என்பதாம்.

**90. கூறுசெய்த விடத்திலே குறும்பு செய்து கையும் தளையுமாய் நிற்பாரைப் போலே.** பிள்ளைலோகாசார்யருடைய ரஹஸ்யங்கள் ஒன்றில் இந்த ஸ்ரீஸூக்தி உள்ளது. சிலரால் பரதைவமாகக் கொள்ளப்படுகிற தேவதாந்தரங்கள் படும் அநர்த்தத்தைத் தெரிவிக்கும் வாக்கியமிது. கூறுசெய்த விடத்திலே அதிகாரம் செலுத்தின விடத்திலே. குறும்பு செய்து தப்புக்காரியம் செய்து (அதன் பயனாக) கையும் தளையுமாய் நிற்பாரைப் போலே கையில் விலங்கிடப்பெற்று (தண்டிக்கப்பட்டு) இருப்பாரைப்போலே என்றபடி. இதன் கருத்தாவது: அரசாங்கமென்றது என்றைக்குமுண்டே! தப்புச் செய்தவர்களை தண்டிப்பது என்றைக்குமுண்டே! ஒரு பெரியவர் அதிகாரியாயிருந்து தப்புச் செய்த ஒருவரைத் தண்டித்து சிறைச்சாலைக்கனுப்பினர். சில நாட்களுக்குள்ளே அந்தப் பெரியவர் ஒரு பெரிய தப்புக் காரியம் செய்து அதற்காக தமக்கு மேற்பட்ட ஓர் அதிகாரியால் தண்டிக்கப் பட்டுச் சிறைச்சாலையில் புகுந்து அங்கே முன்பு தன்னால் தண்டிக்கப்பட்டுக் கிடக்கிற நபரைப் பார்த்து வெள்கி நிற்கிறார். இது இக்காலத்திலும் நிகழும் ஸம்பவமே. "மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ" என்னப் பட்ட ஸர்வேச்வரனுக்குக் கீழே உள்ள தேவர்களெல்லாரும் கூறு செய்வதுமுண்டு, குறும்பு செய்து கையும் விலங்குமாய் நிற்பதுமுண்டு என்று காட்டப்பட்டது.

**91. கெந்தருவருமிவர் கங்குலுமெல்லாம்:—** திருப்பள்ளி யெழுச்சியில் ஒன்பதாவது பாசுரத்தில் இரண்டாமடி இது. "கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள் கெந்தருவருமிவர் கங்குலுமெல்லாம்" என்பது இவ்வடி. கருடர் என்பதும் கந்தர்வர் என்பதும் வடசொற்களாகையாலே கின்னரர், கருடர்கள், கந்தருவர் என்று ஸேவிக்கவேண்டுமென்று சிலர் நினைக்கக்கூடும். அது முறையன்று. கெருடர்கள் என்றும் கெந்தருவர் என்றுமே ஸேவிக்கவேண்டும். மோனையின்பத்திற்குச் சேருமென்று மட்டுமன்று. வடசொற்கள் தமிழில் பயிலும் போது இது நியதி. திருமாலையில் (10) "கேட்டீரே நம்பிமீர்காள் கெருட வாகனனும் நிற்க" என்ற விடத்திலுமிப்படியே; கருடவாகனனன்று.

**92. கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா:—** பெரியாழ்வார் திருமொழியில் (3—3—8) பாசுரத்தின் தொடக்கமிது. கண்ணபிரான் ஒரு நாள் காட்டுக்குச் சென்றபோது மிகப் பெரிய காரிய மொன்று நடந்திருக்கிறது. அதாவது *அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறு மடங்கப் பொட்டத்துற்றிக் குன்றமொன்றெடுத்தேந்தி நின்றது. அப்படி நின்றது ஏழு நாளாகையாலே எட்டா நாளில் கண்ணபிரான் திரும்பி வீடு சேர்ந்திருக்கிறான். அப்போது யசோதைப்பிராட்டி சொல்லும் பாசுரமிது. "கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா கோவலரிந்திரற்குக் காட்டிய சோறும் கறியும் தயிரும் கலந்துடனுண்டாய் போலும் ஊட்ட முதலிலேன் உன்றன்னைக் கொண்டு ஒரு போதுமெனக்கரிது வாட்டமிலாப் புகழ் வாசுதேவா உன்னையஞ்சுவனின்று தொட்டும்." கேட்டறியாதன என்பதற்கு உன்னுடைய சரிதைகளில் இதுகாறும் கேட்டறியாதன என்று பொருளன்று. ராமாவதாரம் முதலான கீழில் அவதாரங்களிலும் இப்படிப் பட்டதொரு கதை கேட்டறிவாரில்லையன்றோ! ஆகவே எந்தப் புராணத்திலும் கேட்டறியாத என்றபடி.

**93. கைவண்ணம் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே:—** திருநெடுந்தாண்டகத்தில் இருபத்தோராவது பாசுரத்தின் மூன்றுமடி இது. கையும் வாயும் கண்ணும் அடியும் எல்லாம் தாமரை வண்ணம் என்று சொல்லலாமாயிருக்க 'கைவண்ணம் தாமரை' என்பது, 'வாய் கமலம் போலும்' என்பது, 'கண்ணிணையும் அரவிந்தம்' என்பது. 'அடியும் அஃதே' என்பது இப்படியாக ஏதுக்குச் சொல்லவேணுமென்று சில அரஸிகர்கள் கேட்பர்கள். அநுபவரஸிகர்களின் படியன்றோவிது. கூரத்தாழ்வானும் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் ''அப்ஜபாதம் அரவிந்த லோசநம் பத்மபாணிதலம்'' என்றருளிச் செய்தது காண்க.

**94. கொங்கார் சோலைக் குடந்தைக் கிடந்தமால் இங்கே போதுங்கொலோ:—** பெரிய திருமொழியில் (10—10—8) திருமங்கையாழ்வாருடைய பாசுரமிது. இவ்வாழ்வார் திருவாலி திருநகரியிலிருந்துகொண்டு 'திருக்குடந்தை ஆராவமுதன் இங்கே எழுந்தருள்வனே' என்று பாரிக்கிறுர். நம்மாழ்வார் திருவாய்மொழியில் ''வானமாமலையே அடியேன் தொழ வந்தருளே'' என்றழைத்தது ஒருபுடை. அவர் தாமே திருப்புளிங்குடிப் பாசுரத்தில் ''கூவுதல் வருதல் செய்யாயே''—என்னையாவது அங்குக் கூவிக் கொள்ளவேணும். நீயாவது இங்கு வரவேணும் என்று விகல்பித்தருளிச் செய்தார். ஒவ்வொன்றிலும் சாஸ்த்ரார்த்தம் பொதிந்தே நிற்கும். ''கூவுதல் செய்யாய்'' என்றவிடத்து ''வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீ யொருநாள் கூவுதல் செய்யாய்'' என்று கைங்கர்ய ருசியை முன்னிட்டு அருளிச் செய்தபடியாலே அதுவும் சாஸ்த்ரார்த்தம். ''கூவிக் கொள்ளுங் கால மின்னும் குறுகாதோ'' என்றும் 'கூவிக் கொள்ளாய் வந்தந்தோ' என்றுமுள்ள பாசுரங்கள் திருநாட்டுக்குக் கூவிக்கொள்ளுதலைத் தெரிவிப்பன. இங்குள்ள கூவுதல் அத்தகைத்தன்று. இனி, ''வருதல் செய்யாய்'' என்றவிடத்துச் சுவையைக் கேண்மின். ''இங்கே போதுங்கொலோ'' என்று நாம் மேலே எடுத்த சந்தைக்கு நமது திவ்யார்த்த தீபிகையின் பங்க்திகளிவை— ''அசோக வனத்தில் பிராட்டி பொறுக்கமுடியாத துன்பங்களை அநுபவித்து வருந்திக் கிடக்குமளவில் திருவடி சென்று, ''ஸீதே! என் தோளிலே வீற்றிரும்; ஒரு நொடிப் பொழுதில் உம்மை இராமபிரான் ஸந்நிதானத்திலே கொண்டு சேர்த்திடுவேன்'' என்ன, அதற்குப் பிராட்டி சொல்லுகிற வார்த்தை காண்மின்— ''சரைஸ் து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்த்தந:, மாம் நயேத் யதி காகுத்ஸ்த: தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்'' என்று. சக்ரவர்த்தி திருமகனார் தாமே எழுந்தருளி இலங்கையைப் பொடிபடுத்தி என்னை மீட்டுக்கொண்டு போவாராகில் அதுவன்றோ தகுதி என்றாள். ஸொத்தைப் பெற்று மகிழ வேணுமென்னுமாவல் ஸ்வாமிக்கு இருப்பதே தகுதியாகும்; அந்த முறைமைப்படியே இப்பாட்டில் 'கொங்கார் சோலைக் குடந்தைக் கிடந்த மால் இங்கே போதுங்கொலோ' என்கிறுள். ஏதுக்காக அவர் இங்கு எழுந்தருள வேணுமென்ன, ''இனவேல் நெடுங்கண் களிப்ப'' என்கிறுள். கண்ணாரக் காண்பதற்கு முன்னே வேறொரு

ப்ரயோஜனமில்லை யென்றிருப்பர்கள் பூ நந்துற முன்னம்; காணப் பெற்ற பின்பு அணையவேணுமென்றிருப்பர்கள். அணையவும் பெற்றால் இதற்கு ஒருகாலும் இடையூறு வாராமே இவ்விருப்பு நித்யமாய்ச் செல்ல வேணுமென்றிருப்பர்கள்.

95. கோவை வாயாள் பொருட்டு. வேறு எந்த பாஷையிலும் காண முடியாமல் தமிழ்ப் பாஷையில் மட்டுமே காணக்கூடியதான ஒரு ப்ரயோக ஸரணி கேண்மின். மேலே மகுடமிட்ட பாசுரம் திருவாய்மொழியில் (4-3-1) பதிகத் தொடக்கமான பாசுரம். கொவ்வைக்கனி போன்ற வாயை உடையவளுக்காக என்பது இதன் பொருள். அவள் யார்? அவளுடைய பெயர் என்ன? என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். இது மாதர்க்குப் பொதுவான பெயரே யன்றி சிறப்புப் பெயர் அன்று. ஒரு வ்யக்தி விசேஷத்தைக் காட்டும் பெயர் அன்று என்றபடி. இவ்வாழ்வார் தாமே கீழ்ப்பதிகத்தில் (4-2-8) "கொம்புபோல் சீதை பொருட்டு" என்றருளிச் செய்துள்ளார். இதில் சீதை யென்கிற திருநாமம் ஸ்பஷ்டமாக உள்ளது. அதை நாம் அநாயாஸமாக அறிகிறோம். "கோவை வாயாள் பொருட்டு" என்கிற ப்ரயோகம் அப்படியில்லை என்பது ஸ்பஷ்டம். ஆனால் அந்த வ்யக்தியை நாம் தெரிந்துகொள்ள முடியாமல் போகவில்லை. எதனால் என்றால் "கோவை வாயாள் பொருட்டு" என்ற உடனே "ஏற்றினிறுத்தம் இறுத்தாய் என்று இருப்பதனால் என்க. ஏழுகாளைகளை வலி யடக்கின கதை இதில் சொல்லப்படுகிறது. அது கண்ணபிரான் செய்த செயல். யாருக்காகச் செய்த தென்றால் நப்பின்னைப் பிராட்டிக்காகச் செய்தது என்பது ப்ரஸித்தம். ஆழ்வார் பாசுரங்களில் வேறு பலவிடங்களில் அது ஸ்பஷ்டமாகவே கூறப்பட்டுள்ளது. "பின்னைபொருட்டு ஆன் வென்றானூர்" (பெரிய திருமொழி) என்பது முதலான பல பாசுரங்களினால் ஸ்பஷ்டம். ஆகவே ஏற்றினிருத்தம் இறுத் தாய்" என்கிற சொற்சேர்த்தியைக் கொண்டு "கோவை வாயாள்" என்றது நப்பின்னைப் பிராட்டியை என்று அறியலாகிறது. பெரியாழ்வார் திருமொழியில் "கனங்குழையாள் பொருட்டா" என்பது ஒரு பாசுரம். கனங்குழையாள் என் பதற்கு கனககுண்டலம் அணிந்தவள் என்று பொருள். இதுவும் மாதர்க்குப் பொதுப் பெயரே யன்றிச் சிறப்பாக ஒரு மாதைக் குறிப்பதன்று. ஆனாலும் அங்கு "அரக்கர் தங்கள் இனம் கழுவேற்றுவித்த" என்று சொற்சேர்த்தி யிருப்பதனால் அது கொண்டு கனங்குழையாள் என்றது ஸீதா பிராட்டியை என்று எளிதாக அறி கிறோம். சிறப்புப் பெயரைக் காட்டவேண்டுமிடத்து அதை வ்யக்தமாகக் காட்டா மல் பொதுப் பெயரையிட்டுக் காட்டுவது தமிழ் மரபு. மேல் ஒரு விசேஷம் கேண் மின்—"கோவை வாயாள் பொருட்டு" என்று அருளிச்செய்த ஆழ்வார்தாமே மூன்றாம் பத்தில் ஐந்தாம் பதிகத்தில் "வம்பவிழ் கோதை பொருட்டா" என்று அருளிச்செய்துள்ளார். இங்குக் கோதை என்கிற சொல்லுக்கு மயிர் முடி (அல்லது) பூமாலை என்று பொருள். நறுமணம் மிக்க கூந்தலை உடையவள் என்று பொருள். இந்த வ்யக்தி யார் என்பதை நாம் தெரிந்துகொள்ள மேலேயுள்ள சொற் சேர்த் தியைப் பார்ப்போம். மேலே "மால் விடை ஏழு மடர்த்த" என்று இருப்பதனாலும் அதற்கு 'ஏழு காளைகளை வலி அடக்கினவன்' என்பதே பொருளாதலாலும் 'வம் பவிழ் கோதை' என்றது நப்பின்னைப்பிராட்டியையே என்று எளிதாக அறியலா

கிறது. வம்பவிழ் கோதையாள் பொருட்டு என்னாமல் வம்பவிழ் கோதை பொருட்டு என்றது அன்மொழித்தொகை என்பர் தமிழர். (அதாவது பஹுவ்ரீஹி ஸமாஸமென்கை.) வம்பவிழ் கோதையை உடையவளுக்காக என்றபடியாயிற்று. கோதை என்கிற சொல் ஆண்டாளுக்கும் வாசகமாக உள்ளது. திருப்பாவையிலும் நாச்சியார் திருமொழியிலும் நிகமனப் பாசுரங்களில் கோதை என வருவது ஆண்டாளைக் குறிப்பதாகும். "கோதை பிறந்த வூர்" "கோதை தமிழ் ஐயைந்தும் ஐந்தும்" இத்யாதிகளான பின்னோர் பாசுரங்களிலும் கோதை என்பது ஆண்டாளைக் குறிக்கும். பெரியாழ்வார் *நெறிந்த கருங்குழல் பதிகத்தில் "அல்லியம்பூ மலர்க் கோதாய்" என்கிறார். இது ஸீதா பிராட்டிக்கு விளி. 'அழகிய பூக்களை அணியப் பெற்ற மயிர் முடியை உடையவளே!' என்றபடி. இங்கும் கோதை என்பதற்கு ஆண்டாள் பொருளன்று. பெரிய திருமொழியில் 'கோதைவேல் ஐவர்க்காய்' என்ற விடத்திலும் மற்று எந்த விடத்திலும் கோதை என்பதற்கு கோதாதேவி என்பது பொருளன்று என்பதை அறியாதாரில்லை. இனி "வம்பவிழ் கோதை பொருட்டா" என்னுமிடத்தை எடுத்துக்கொள்ளுவோம். இங்குள்ள கோதை என்கிற சொல்லுக்கும் கோதா தேவி அர்த்தமன்று என்பது புனருக்தம். அப்பாசுரமுள்ள பதிகத்திற்கு ச்லோகமிடுகிற வேதாந்தவாசிரியர் (த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில்) "கோதார்த்தோக்ஷாவமர்த" என்று பணித்திருப்பது காண்கிறது. இது பொருந்த வழியில்லை. "நீளார்த்தோக்ஷாவமர்த" என்றிருந்த பாடம் எப்போதோ மாறிவிட்டது என்பது நமது கொள்கை. "மாறவில்லை, உண்மையான பாடமே உள்ளது" என்பரேல் தேசிகனை ப்ராந்தராகக் கொள்ளவேண்டிவரும். இது பற்றின ஆராய்ச்சி விசேஷங்களை நமது "கோதை போலும் ஆராய்ச்சி" முதலிய பல நூல்களில் கண்டுகொள்க.

96. __கௌத்துவமுடைக் கோவிந்தனோடும்.__ இது பெரியாழ்வார் திருமொழிப் பாசுரம். (4—5—8) எம்பெருமானுடைய திருமார்பில் விளங்கும் ஒரு விலக்ஷண ரத்னத்திற்கு கௌஸ்துபமென்று பெயர். இது வடசொல். இதன் விகாரம் கௌத்துவம் என்பது. இச்சொல் நாலாயிர திவ்வியப்பிரபந்தத்துள் இந்த ஓரிடத்தில் மட்டுமே வருவது. இவ்வாழ்வார் தாமே "குருமாமணிப்பூண் குலாவித் திகழும் திருமார்பு" (1-2-10) என்று மருளிச் செய்துள்ளார்: அங்கும் "குருமா மணிப்பூண்" என்று கௌஸ்துப ரத்னமே விவக்ஷிதம். 'குரு' என்பது வடசொல். மிகச் சிறந்த என்று பொருள். நம்மாழ்வார் திருவாய்மொழியில் 'பல பலவே ஆபரணம்' என்று பொதுப்பட அருளிச்செய்தாரேயன்றி 'கௌஸ்துப ரத்னத்தைச் சிறப்பித்தெடுத்துப் பேசிற்றிலர்.

97. __சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கி:__ இது பெரியாழ்வார் திருமொழியில் (4-7-3) கண்டமென்னும் கடிநகர் மங்களாசாஸனப் பதிகத்திலுள்ள பாசுரம். ஸ்ரீபதரிகாச்ரமம் செல்லும் வழியிலுள்ள தேவ ப்ரயாகை என்கிற க்ஷேத்ரத்திற்கே கண்டமென்னுங் கடிநகர் என்று திருநாமம். அத்தலத்தில் பாகீரதியும் அலக நந்தாவும் ஸங்கமம் பெற்று ப்ரவஹிப்பது ப்ரத்யக்ஷலக்ஷ்யம். அதுவே இப்பாசுரத்தில் அநுஸந்திக்கப்பட்டதாகும். "சங்கரன்

சடையினில் தங்கி'' என்றதன் விவரணம் வருமாறு—திருமால் உலகமளந்த காலத்தில் மேலே ஸத்யலோகத்திற் சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தன் கைக் கமண்டல தீர்த்தத்தாற் கழுவினன். அந்த ஸ்ரீ பாத தீர்த்தமாகப் பெருகித் தேவலோகத்திலிருந்த ஆகாய கங்கா நதியை ஸூர்ய குலத்துப் பகீரத சக்ரவர்த்தி, கபில முனிவனது கண்ணின் கோபத்தீக்கு இலக்காகி உடலெரிந்து சாம்பலாய் நற்கதியிழந்த தனது மூதாதையரான ஸகர புத்திரர் அறுபதினாயிரவரை நற்கதி பெறுவிக்கும் பொருட்டு நெடுங்காலந் தவஞ்செய்து மேலுலகத்திலிருந்து கீழுலகத்திற்குக் கொணர்கையில், அப்பகீரதனது வேண்டுகோளால் சிவபிரான் அந்நதியை முடியின் மேல் ஏற்றுச் சிறிது சிறிதாகப் பூமியில் விட்டனன் என்ற வரலாறு உணரத் தக்கது.

**98. சாமாறும் கெடுமாறும்:—** இது திருவாய்மொழியில் (4—9—2) பாசுரம். சாமாறுக்கு மேல் கெடுமாறு என்று ஒன்றுண்டோ? என்று நம்பிள்ளையைச் சிலர் கேட்டனர் போலும்! அதற்கு ஸமாதானம் போல் ஈடு முப்பத்தாறாயிரப்படியில் அருளிச் செய்துள்ள விநோத கதையொன்று கேண்மின். ஈட்டுப் பங்க்தி வருமாறு—(கெடுமாறும்)—தன் விநாசத்தையுமிசையும், கையிலகப்பட்ட த்ரவ்யம் தப்பினால்; அத்தையேயிற இவன் தஞ்சமாக நினைத்திருப்பது. ஒருத்தனை ராஜத்ரோஹி என்று கையையும் காலையும் தறிக்க, இவனை வினவப் புகுந்தவர்கள், 'இப்படி பட்டதாகாதே' என்ன, 'ஆயிரம், ஐந்நூறு என்று சில காசு தா' என்னாதே இவ்வளவோடே போயிற்று உங்களநுக்ரஹமிறே' என்றானாம்''—என்று. இதைச் சிறிது விவரிக்கிறோம். அரசாங்கத்தார் செய்யும் தண்டனைகள் இரண்டு விதம். ஒன்று சிறைச்சாலையில் புகுவிப்பது மற்றொன்று 100, 500, 1,000 என்றிப்படி அபராதத் தொகை செலுத்தக் கட்டளையிடுவது. இவ்விரண்டில் அபராதத் தொகை செலுத்துவதென்பது லகுவான தண்டனையாகும். சிறைச்சாலை புகுவிப்பதைக் காட்டிலும் பணத் தொகை செலுத்த விதித்தால் பணத்தைச் செலுத்தி விட்டு ஸந்தோஷமாகத் திரும்புவர் குற்றவாளிகள். மேலே நம்பிள்ளை காட்டின கதையில் ராஜத்ரோஹி என்னப்பட்ட குற்றவாளி உண்மையில் தனிகன். ஆனால் க்ருபணன். அவனைக் கை கால்களைத் தறிக்க தண்டனையிட்டார் அரசர். உதிர மொழுகவொழுக வீடு வந்து சேர்ந்திருக்கிறான். உற்றார் உறவினர் வினவவந்து உபசாரவார்த்தைகள் சொல்லும்போது இவன் என்ன சொல்லியிருக்கவேண்டுமென்றால் ''ஆயிரம் இரண்டாயிரம் என்றுஅபராதத்தொகை விதித்திருந்தால் செலுத்தி விட்டு வந்திருப்பேன். ஐயோ! இப்படி அங்கபங்கம் செய்துவிட்டானே!'' என்ன வேண்டும். இவன் தேஹத்தைக் காட்டிலும் பொருளையே மதிப்பவனாதலால், ''ஆயிரம் ஐந்நூறு தா என்னாதே இவ்வளவோடே போயிற்றே உங்களநுக்ரஹம்'' என்றது அசடுவழியும் வார்த்தை. அரை நாழிகையில் சாகப் போகிறான் இவன். பணத்தைச் சேமித்துவைத்து என்ன செய்யப்போகிறானோ தெரியவில்லை. இதுதான் சாமாறுக்குமேல் கெடுமாறு.

**99. சிவன்முடிமேல் தான் கண்டு பார்த்தன் தெளிந்த பைந்துழாயான் பெருமை.** திருவாய்மொழியில் (2-8-6) ''தீர்த்தனுலகளந்த சேவடி மேல் பூந்தாமம் சேர்த்தியவையே சிவன் முடிமேல் தான் கண்டு பார்த்தன் தெளிந்

தொழிந்த பைந்துழாயான் பெருமை பேர்த்து மொருவரால் பேசக்கிடந்ததே.'' என்பது ஒருபாசுரம். இதில் தெரிவிக்கப்பட்ட கதை வருமாறு. மஹாபாரத யுத்தத்தில் அர்ஜுநனுக்குப் பாசுபதாஸ்த்ரம் வேண்டியிருந்தது. சிவபிரானை ஆராதித்து அதனைப் பெறவேணுமென்று அவன் முயற்சி செய்யப் போகையில் இவனுக்கு இத்தனை பரிச்ரமம் ஏதுக்கு என்று கருணைகொண்ட கண்ணபிரான் அவ்வர்ஜுநனை நோக்கி 'ருத்ரனிடத்தில் நீ செய்ய நினைத்திருக்கிற ஆராதனையை என் காலிலே செய்து அபேக்ஷிதம் பெறுவாயாக' என்று கட்டளையிட்டுத் தனது முழந்தாளைக் காட்டினன். அர்ஜுநனும் அங்கே சில புஷ்பங்களையிட்டு அர்ச்சிக்க அன்றிரவு அவன் கனவிலே உருத்திரக்கடவுள் அந்த புஷ்பங்களைத் தனது தலையிலே அணிந்து கொண்டு காட்சிதந்து அஸ்த்ரத்தையும் அளித்தனன் என்பதாம். ஆசார்ய ஹ்ருதயத்தில் (நான்காம் ப்ரகரணம் இரண்டாவது சூர்ணை) "கள்வா தீர்த்தனென்று வசநப்ரத்யக்ஷங்களுங் காட்டி'' என்றவிடத்து வ்யாக்யானத்தில் மணவாளமாமுனிகளின் வ்யாக்யான ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யமானவை. அவை வருமாறு. ''பார்த்தோ விஜேதா மதுஸூதநஸ்ய பாதாரவிந்தார்ப்பித சித்ரபுஷ்டம் ததர்ச கங்காதர மௌலி மத்யே பபூவ வீர: க்ருத நிச்சிதார்த்த:'' என்கிற படியே தான் திருவடிகளிற் சாத்தின புஷ்பங்களோடு ஸஜாதீயமான வற்றையன்றிக்கே அவை தன்னையே, பாடே பக்கே யன்றிக்கே ருத்ரன் தலைமேலே, ஆப்த வாக்யத்தாலன்றிக்கே தானே ப்ரத்யக்ஷித்து *ஸ து பார்த்தோ மஹாமநா:* என்கிறபடியே பேரளவுடையனானவன் நிர்ணயித்த பரத்வம் மந்தமதிகளாலே இன்றாராயும்படி யிருந்ததோ என்று ப்ரத்யக்ஷத்தையும் காட்டி—என்பதாம்.

<u>100. சீற்றமுளவாகிலும் செப்புவன்.</u> திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் ஈற்றுப்பதிகம் மாற்றமுளவாகிலும் என்று தொடங்குவது. ஆழ்வார் தமக்கு ஸம்ஸாரத்திலுண்டான ஆர்த்தியையும் அச்சத்தையும் பல த்ருஷ்டாந்தங்களையிட்டுப் பேசுகிறுரிப்பதிகத்தில். ''ஆற்றங்கரை வாழ் மரம் போல் அஞ்சுகின்றேன்'' ''காற்றத் திடைப்பட்ட கலவர் மனம்போல் ஆற்றத் துளங்கா நிற்பன் *பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல் *இருபாடெரி கொள்ளியினுள்ளெறும்பே போல் *வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே என்றிப்படிப் பல த்ருஷ்டாந்தங்கள் பாசுரந்தோறும் காட்டப்பட்டுள்ளன. எம்பெருமான்மேல் பழியிட்டுக் கூறுவது இப்பதிகத்தில் ஸ்பஷ்டமாகக் காண்கிறது. *மாற்றமுள வாகிலும் சொல்லுவன்* என்கிற முதற் பாசுரத்திற்கு என்ன பொருளென்றால், "எம்பெருமானே! என்னை நீ படுகுழியிலே தள்ளி அநர்த்தங்களை இன்னமும் அநுபவிப்பிக்கப் பார்க்கிறாய் என்கிறவிதை நான் விண்ணப்பம் செய்தால் இதற்கு நீ ஏதோ மறு மாற்றங்கள் சொல்லுவாய். ஆனாலும் என்னுடைய விவக்ஷிதத்தை நான் சொல்லாமலிருக்க மாட்டேன்'' என்று. உடனே *சீற்றமுளவாகிலும் செப்புவன்* என்கிறார். இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம்பற்றிய பொருள் ஒரு வகை. ஸ்ரீவசனபூஷணத்தில் பிள்ளை லோகாசார்யர் திருவுள்ளம் பற்றின பொருள் ஒரு வகை. ''கீழ்ப் பண்ணின அபசாரங்களாலே சீற்றமிருந்தாலும்'' என்பது பெரியவாச்சான்பிள்ளை கொண்ட பொருள்.

'இப்போது அடியேன் சொல்லப்போகிற வார்த்தையினாலே சீற்றமுண்டானாலும்'' என்பது பிள்ளைலோகாசார்யர் கொண்டபொருள். இவ்வளவே வாசி. ஸ்ரீவசனபூஷணம் மூன்றும் ப்ரகரணத்தின் முடிவில் ''சீற்றமுள வென்ற அநந்தரத்திலே இவ்வர்த்தத்தைத் தாமே யருளிச் செய்தாரிறே. சீற்ற முண்டென்றுந்தாற் சொல்லும்படி யென்னென்னில்; அருளுக்கு ஆர்த்தியும் அநந்யகதித்வமும் சொல்லப்பண்ணும். சீறினாலும் காலைக் கட்டிக் கொள்ளலாம்படி யிருப்பானொருவனைப் பெற்றால் எல்லாம் சொல்லலாமிறே'' என்றுள்ள ஸ்ரீ ஸூக்திகளும் அவற்றின் வ்யாக்யானமும் இங்கு ஸ்மரிக்கத் தக்கன.

## 101. சுந்தரத்தோளுடையான் சுழலையில் நின்றுய்துங்கொலோ.

நாச்சியார் திருமொழியின் ஒன்பதாவது பதிகத்தின் முதற்பாசுரத்தின் ஈற்றடியிது. கீழ்ப்பதிகத்தில் திருவேங்கடமுடையான் பக்கல் மேகத்தைத் தூது விட்டாள் ஆண்டாள். மேகம் தூது செல்லாததோடு விசேஷமாக மழை பொழிந்திட்டது. மழை காலத்துத் தோன்றக்கூடியவை யெல்லாந் தோன்றின. அப்பொருள்களில் இந்திரகோபம் என்பதுமொன்று. பட்டுப்பூச்சி என்பது இது. இது எம்பெருமானுடைய திருப்பவளத்திற்குப் போலியாயிருக்கும். இவளுடைய திருத்தகப்பனாரான பெரியாழ்வார் இட்டருளின திருமாலிருஞ்சோலைப் பதிகத்தில் 'இந்திர கோபங்கள் எம்பெருமான் கனிவாயொப்பான் சிந்தும் புறவில் தென் திருமாலிருஞ் சோலையே'' என்றருளிச் செய்துள்ளார். ஆனால் அவர்க்கு இந்தப் பட்டுப்பூச்சிகள் உத்தீபகமாக ஆகவில்லை. எம்பெருமானைப் பிரிந்து வருந்துகிற ஆண்டாளுக்கு அவை உத்தீபகமாய் விட்டபடியால் அவற்றைக் கண்டவாறே ஐயோ வென்று கதறுகிறாள். இப்பதிகத்திலும் மேற்பதிகத்திலும் ஆண்டாள் படுகிறபாடு மிக விலக்ஷணமானது. அடுத்த பதிகத்தின் முதற்பாட்டில் *கார்க்கோடல் பூக்காள்* என்று மழைகாலத்துப் பூக்களை விளித்து ''எம்மேல் உம்மைப் போர்க் கோலம் செய்து போரவிடுத்தவன் எங்குற்றான்?'' என்று வினவுகின்றாள். இந்திர கோபங்களும் கருவிளைபொன் மலர்களும் மழை காலத்தில் இயற்கையாகத் தோன்றுவன வென்பதை மறந்து தன்னை நலிவதற்காகத் திருமாலிருஞ்சோலையழகர் தோற்றுவித்தவை என்று கருதி அவ்வழகர்மேல் பழியிட்டுப் பேசுகிற பாசுரங்களிவை. ''சுந்தரத் தோளுடையான் சுழலை'' என்றது 'திருமாலிருஞ்சோலையழகர் படுத்துகிறபாடு' என்றபடி. இவ்விடத்தில் ''ப்ரஜை தெருவிலே இடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே'' என்கிற ஸ்ரீவசனபூஷண திவ்ய ஸூக்தி அநுஸந்திக்கத் தக்கது.

**102. சூதனாய்க் கள்வனாகி.** ''சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடிசைந்த காலம் மாதரார் கயற்க ணென்னும் வலையுள் பட்டழுந்துவேனைப் போதரேயென்று சொல்லிப் புந்தியிற்புகுந்து தன்பால் ஆதரம் பெருக வைத்த அழகனூரரங்க மன்றே'' என்பது திருமாலையில் பதினாறாவது பாசுரம். ஸ்ரீ வசனபூஷணத்தில் அர்ச்சாவதாரப் பெருமையைத் தெரிவிக்கும் ஒரு சூர்ணை ''இது தான் விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப்போரும் சேதநர்க்கு வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய்......'' என்பது. விஷயாந்தர ப்ரவணர்களின் விஷயாந்தர

ருசியை மாற்றித் தன்னிடத்தில் ஈடுபடுத்திக் கொள்ளவல்ல பெருமை அர்ச்சாவதார திவ்யமங்கள விக்ரஹத்துக்குண்டென்பது இதன் பரம தாற்பரியம். அது இப்பாட்டின் பின்னடிகளில் அற்புதமாக விளங்காநின்றது (அதாவது) ''சூது, களவு என்றிப்படிப்பட்ட துச்சரிதங்களாலே எம்பெருமானுடைய அலர்புரிந்த நெடுந் தடக்கைக்கும் எட்டாமல் நெடுந்தூரம் சென்ற என்னை அவ்வெம்பெருமானுடைய அழகானது 'பயலே இங்கு வா' என்றழைக்க, அதை நான் செவியிலேற்றுக் கொள்ளாமற்போக, பின்னையும் அவ்வழகு என்னை விடமாட்டாதே என் நெஞ்சினுள்ளே வந்து சிக்கனப்புகுந்து ஸ்திரமாகக் குடியிருந்து எப்பெருமான் பக்கலில் நான் மிக்க ஆதரம் வைக்கும்படி செய்த விசித்திரம் என்னே!'' என்று உருகுகிறார் ஆழ்வார். இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம்:—''தன்பால் ஆதரம் பெருக வைத்த'' என்ற அடைமொழியை அழகனிடத்திலே அந்வயித்துப் பொருளுரைப்பர் பெரும்பான்மையர். அது மிக்க சுவைக்கேடு. அவ்வடைமொழியை அழகிலே அந்வயிக்க வேண்டும். எம்பெருமான் ஓர் அழகு உடையவன்; அவ்வழகு எப்படிப்பட்டதென்றால், சூதனாய்க் கள்வனாகி......வலையுள் பட்டழுந்துவேனைப் போதரே என்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பால் ஆதரம் பெருக வைத்தது— என்றிங்ஙனே உய்த்துணர்க. தன்பால்—எம்பெருமானிடத்திலே என்றபடி. 'பக்தி வர்த்தகமான கர்ம ஜ்ஞாநஸ்தானத்திலே நிற்கிறதாய்த்து இவர்க்கு வடிவழகு. இவர்க்கு ஸம்சயத்தை அறுக்கைக்கும் ஆதரத்தைப் பெருக்குகைக்கும் ஸாமக்ரி ஒன்றேயாய்த்து'' என்ற வ்யாக்யான பங்க்திகள் உற்றுநோக்கத்தக்கன.

**103 செங்கணான் கோச்சோழன் சேர்ந்தகோயில்:—** சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் திருநறையூர் என்பதுமொன்று. இது நாச்சியார் கோயிலென்று வழங்கப்படும். இத்தலத்தில் செங்கணான் கோச்சோழன் என்பவன் ''திருநறையூர் மணிமாடம்'' என்னும்படியாகச் சில திருப்பணிச் சிறப்புகளைச் செய்ததனால், திருவரங்கம் பெரிய கோயிலில் ப்ராகாரகோபுர மண்டபாதி திருப்பணிகளைச் செய்தருளின திருமங்கையாழ்வார் இவன் மீது மிக்க வுகப்புக் கொண்டு இவனைப் பாட்டுத்தோறும் புகழ்கின்றார். பெரிய திருமொழியில் (6-6) ''அம்பரமும் பெருநிலனும்'' என்று தொடங்கும் பதிகம் காண்க. இப்பதிகத்தில் எட்டாம் பாட்டில் இவ்வரசனுடைய ஒரு பெருமை கூறப்பட்டுள்ளது. அதாவது ''இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோளீசற்கு எழில் மாட மெழுபது செய்துலகமாண்ட திருக்குலத்து வளச் சோழன்'' என்பதாம். அந்த வரலாறு வருமாறு. இச்சோழன் முன்பிறவியிற் சிலந்தியாய்ப் பிறந்து திருவானைக்காவிலுள்ள சிவலிங்கத்துக்குத் தன்னூலாலிழைத்துவந்த மேல் விதானத் திருப்பணியை அழித்துவந்த யானை நுழையா வண்ணம் செய்து சிவபிரானுக்கு மாடக்கோயில் எழுபது கட்டி வழிபட்டவனென்பது தேவாரம் முதலியவற்றாலும் அறியப்படும். சோழ மண்டலத்தின் கூறுகளாக அமைந்த ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு சிவாலயம் இச்செங்கணானாற் கட்டப்பட்டதென்பர் சேக்கிழார். ''செங்கணான், அந்தமில் சீர்ச்சோணாட்டிலகனாடு தொறு மணியார், சந்திர சேகரனமருந் தானங்கள் பல சமைத்தான்'' என்பது பெரிய புராணம். இங்ஙனம் சிவதொண்டினைச் சிறப்பப் புரிந்த இச்சோழன் முடிவில் திருநறையூர்த் திருமாலுக்கு அடியனாய்ச் சிறப்புற்றானென்க. ''வேதத்தில்

ஸ்ரீபுருஷ ஸூக்தாதிகளை உச்சரியா நின்றுள்ள வாயையுடையராய் எட்டுத் தோள்களையுமுடையராயிருக்கிற தேவர்க்கு, தர்சநீயமான மாடங்களெழுபதும் சமைத்துப் பின்னையும் தன்னுடைய அபிமதம் கிடையாமையாலே அவ்வபிமத ஸித்த்யர்த்தமாக அவன் வந்து ஆச்ரயிக்கிற தேசம்'' என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான வாக்கியம்.

104 செங்குறிஞ்சித்தாரார் நறுமாலைச்சாத்தற்கு:— சிறிய திருமடலில் திருமங்கையாழ்வார் பாசுரமிது. கண்ணபிரானுடைய குடக்கூத்தில் ஈடுபட்டு நிலைகலங்கின ஒரு கோபியின் நிலைமையை அடைந்த பரகாலநாயகி, தன்னுடைய நோய் நீங்கத் தனது திருத்தாயார் செய்த காரியங்களைச் சொல்லு மடைவில் உள்ள காரியமிது. இந்த நம்முடைய திவ்யார்த்த தீபிகையில் உள்ள வாக்யங்களிவை:— செங்குறிஞ்சித்தாரார் என்ற வாக்கியத்தில் ' நறுமாலைச் சாத்தற்கு'' என்று பாடமோத வேண்டியதை விட்டு ''நறுமாலை சாத்தற்கு'' என்று தப்பான பாடம் ஓதிவந்தனராகையால் இவ்வாக்கியத்தின் பொருளை உள்ளபடி அறியாதொழிந்தார்கள் பலர். 'சாஸ்தா' என்கிற வடசொல் சாத்தன் எனத் திரிந்து கிடக்கிற தென்பதை யறியாமல் ''செங்குறிஞ்சித் தாரார் நறுமாலை சாத்திக் கொள்ளுகிறவனுக்கு'' என்று கற்றறிந்த பலபெரியோர்களும் பொருள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அங்ஙனன்று; செங்குறிஞ்சித்தாரார் நறுமாலையையுடைய, (சாத்தற்கு) சாஸ்தா என்று ப்ரஸித்தமான தேவதாந்தரத்திற்கு என்று உண்மைப் பொருள் உணர்க. சாத்தன்+கு=சாத்தற்கு. இவ்வகைப் பொருளில் ''மாலைச் சாத்தற்கு'' என்றே பாடமோதவேண்டும். அமரகோசத்தில் ''ஸர்வஜ்ஞஸ் ஸுகதோ புத்த:'' என்று தொடங்கி ''முநீந்த்ர: ஸ்ரீகந: சாஸ்தா'' என்று புத்ததேவதைக்குப் பெயர்கள் படிக்கப்பட்டுள்ளமை காண்க.

105 சேமங்குருகையோ, செய்யதிருப் பாற்கடலோ? ஆசார்ய ஹ்ருதயத்தில் ''அத்ரி ஜமதக்நி பங்க்தி ரத வஸுநந்த ஸூநுவான வனுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ? வ்யாஸாதிவதாவேசமோ? மூதுவர் கரை கண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம் நோற்ற வனந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோ வென்று சங்கிப்பர்கள்'' என்கிற சூர்ணையின்படி ஆழ்வாருடைய அவதார ரஹஸ்யம் அறுதியிட முடியாததாயிருக்கின்றது. ''சேமங் குருகையோ செய்ய திருப் பாற்கடலோ? நாமம் பராங்குசமோ, நாரணமோ?—தாமம், துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு முளவோ பெருமானுனக்கு?'' என்கிற வெண்பா ஒரு மஹாபுருஷரால் விஜ்ஞாபிக்கப்பட்டுத் திருக்குருகூர் ஸந்நிதியில் அடிக்கடி ஸேவிக்கப்படுகிறது. ஆழ்வாரை நோக்கி ஒரு பக்தர் வினவுகின்றார். ''ஆழ்வாரே! தேவரீருடைய இருப்பிடம் திருக்குருகூரா? திருப்பாற்கடலா? தேவரீருடைய திருநாமம் பராங்குசனென்றா? நாராயணனென்றா? தேவரீரணியுந் திருமாலை மகிழமாலையா, திருத்துழாய் மாலையா? தேவரீருக்கு இரண்டு தோள்களா, நான்கு தோள்களா?'' என்று வினவுகின்ற விதனால் ஆழ்வாரை ஸாக்ஷாத் நாராயணனாகவும் கருதலாமென்று காட்டப்பட்டதாயிற்று.

**106 சேஷத்வ ஹாநியில்லையிறே:—** அமலனுதிபிரானருளிச் செய்த திருப்பாணாழ்வார் முனிவாஹனனென்று திருநாமம் பெற்றார். "ஆபாத சூட மநுபூய" என்ற தனியனில் "மநவே முனிவாஹநம் தம்" என்றும் 'காட்டவே கண்ட பாதகமலம்' என்கிற தனியனில் 'முனியேறித் தனி புகுந்து' என்றுமுள்ளவை காண்க. ஸ்ரீரங்கநாதனுடைய நியமனத்தினால் லோகஸாரங்க மஹாமுனிகள் பாண்பெருமாளிடம் வந்து "உம்மை நம்பெருமாள் தமது ஸந்நிதானத்திற்குக் கொண்டு சேர்க்கும்படி நியமித்தருளினார்" என்று சொல்ல, "ஐயோ! நான் நீச ஜாதியனாயிற்றே! அந்த திவ்ய ஸந்நிதானத்தை நான் மிதிக்கத் தகுமோ!" என்று விண்ணப்பஞ்செய்ய, "நீர் நடந்து வர வேண்டா; எனது தோளில் ஏறிக் கொள்ளும்" என்று சொல்ல, இது மஹாபசாரமென்று பாண்பெருமாள் மறுக்கவும் லோகஸாரங்கர் மிக மிக நிர்ப்பந்தித்தமையால் சேஷத்வத்திற்காட்டில் பாரதந்த்ர்யம் மேம்பட்டதன்றோ வென்று கருதின பாண்பெருமாள் முனிவரின் தோளின் மேலேறி வீற்றிருந்து செல்லத் தொடங்கி உடனே கையும் தாளமுமாய்ப் பாசுரம்பாடத் தொடங்கி "அமலனாதிபிரான் அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்" என்று பாசுரம் பாடியுள்ளார். முனிவரை இவர் தாம் தோளில் தூக்கிக் கொண்டு சென்றால் அடியார்க்குத் தம்மை ஆட்படுத்தியதாகச் சொல்லத் தகுதியுண்டு. அவர் தோளிலே தாமேறி வீற்றிருந்து "அடியார்க்கென்னை யாட்படுத்த" என்பது என்னே! என்று சங்கை பிறக்கும். இதற்குப் பரிஹாரமாக முன்னோர்களின் வ்யாக்யானத்திலுள்ள அற்புதமான ஸ்ரீஸூக்தியாவது: "திருத்துழாய் திருவடியிலே கிடக்கிலென்; திருமுடியிலே கிடக்கிலென்; சேஷத்வஹாநி யில்லையிறே" என்பதாம். (அதாவது) "தோளிணைமேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடி மேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தினால் எம்பெருமான் திருத்துழாயைப் பலவாறு விநியோகங்கொண்டமை விளங்கும். திருவடிகளிலேயே இருக்கக் கடவதான திருத்துழாய் தோளிலும் திருமார்பிலும் திருமுடியிலும் ஏறின வளவால் அது சேஷத்வத்தை இழந்ததாகாதன்றோ? அதே போல சேதனனுக்கு அசித்வத் பாரதந்த்ர்யம் ஸ்வரூபமானதால் முனிவரின் கட்டளைக்குப் பரதந்த்ரராகி அவருடைய திருத்தோளில் ஏறி வீற்றிருந்தது சேஷத்வ ஸ்வரூப நாசகமாகாது. சேஷத்வத்திற்காட்டில் மேம்பட்ட பாரதந்த்ர்யத்துக்கு ஏற்றதேயாம்.

**107" (ஸ்ரீ) சைலேச தயாபாத்ரம்":-** (சிறு குறிப்பு) தமிழில் "சை" என்னுமெழுத்தை முற்கொண்ட சொல்வடிவம் காண்பதரிது. நமது பாஷை மணிப்ரவாளமாகையால் ஆங்காங்கு ஸம்ஸ்க்ருத மகுடங்களையும் சூட்டிக்கொள்ளுகிறோம்.)

தென்திருவரங்கங் கோயில்கொண்ட தெய்வசிகாமணி நம் மணவாளமாமுனிகளுக்குத்தான் சிஷ்யனாகி அவரைத்தனக்கு ஆசார்யனாகக் கொண்டு க்ருதார்த்தனாகக் குதூஹலித்தான். திருவாய்மொழிக்குச் சிறந்த வியாக்கியானமாக அமைந்த ஈடு முப்பத்தாறாயிரப்படியின் விசேஷார்த்தங்களை மணவாளமாமுனிகளின் திருவாக்கினால் கேட்கப்பெற வேணுமென்று ஆவல்கொண்டான். தனது திருக்

கோயிலின் திருமுன்பே கருடமண்டபத்தில் எழுந்தருளியிருந்து ஸாதித்தருள வேணுமென்று கட்டளையிட்டனன். அதைக் கேட்டவுடனே மாமுனிகள்,

"நாமார் பெரியதிரு மண்டபமார் நம்பெருமாள்
தாமாக வெம்மைத் தனித்தழைத்து—நீமாறன்
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாளுமிங்கே
வந்துரையென் றேவுவதே வாய்ந்து."

என்று நைச்சியந்தோற்ற அநுஸந்தித்து மறுநாள்தொடங்கி ஓராண்டளவும் பகவத் விஷயப்ரவசனம் நடத்திவர, ஸமாப்தி தினத்தில் ஸ்ரீரங்கநாதன் ஒரு சிறு குமாரனாய்த் திருவோலக்கத்திலே வந்துநின்று,

"ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்,
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்"

என்கிற திவ்யபத்யத்தைக் கைகூப்பி நின்று விஜ்ஞாபித்தனனாக இதிஹாஸம் ப்ரஸித்தமாகவுள்ளது. இதுவொரு அதிசயோக்தியான இதிஹாஸமாயிருக்கலாமென்று சிலர் நினைக்கக்கூடும். மணவாளமாமுனிகளின் திருவடிகளிலும் அவருடைய வைபவங்களிலும் ப்ரதிபத்தி யுள்ளவர்களுங்கூட இதுவொரு அதிசயோக்தியாயிருக்குமோவென்று நினைக்கக்கூடும். இத்தனியனில் சொற்கள் அமைந்திருக்கிற அமைப்பை ஆராயுமிடத்தில் இது தெய்வவாக்கேயன்றி மானிட வாக்காக இருக்க முடியாதென்பதை ப்ராமாணிகர்கள் எளிதிலுணரலாம். ஏன்? **ஸ்ரீசைலேசதயாபாத்ர** மித்யாதி ச்லோகம் ஸாதாரணமாகவொரு வ்யுத்பந்நனால் இயற்ற முடியாததோ? இதைவிட இன்னமும் அதிசயித்ததாக இயற்ற முடியுமே. இது தெய்வவாக்காகவே யிருக்க வேணுமென்று எதுகொண்டு சொல்லுவது? என்னில்; அதை நன்கு நிரூபிக்கிறோம்.

இந்த ச்லோகமருளிச் செய்தவனான எம்பெருமான்தானே பண்டு இராமபிரானாகவும் கண்ணபிரானாகவும் திருவவதாரம் செய்தருளி யிருந்தவனென்பதில் ஒருவர்க்கும் ஸந்தேஹமில்லையே. "மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தி யெம்மரசே அரங்கத்தம்மா!" என்றும், "கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் அண்டர் கோனணியரங்கன்" என்றும், "மதுரைமா நகரந்தன்னுள் கவளமால் யானைகொன்ற கண்ணனை யரங்கமாலை" என்றும் ஆழ்வார்கள் ஸ்ரீராம ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தியாகவே அரங்கநாதனை அருளிச்செய்திருப்பது அபலபிக்க முடியாததன்றோ!

அப்படி இராமபிரானாகத் திருவவதரித்திருந்த காலத்திலும் கண்ணபிரானாகத் திருவவதரித்திருந்த காலத்திலும் சில வ்யக்திகளிடத்தில் ஆச்ரயித்து, அவ்விடங்களில் திருவுள்ளத்திற்கு த்ருப்தியில்லாமலே முடிந்திருக்கிறது. ஒவ்வொருவரிடத்திலும் ஒவ்வொரு குறைகண்டு வெறுப்புடனிருக்க நேர்ந்தது. அந்த வெறுப்பெல்லாந்தீர மணவாளமாமுனிகளை ஆச்ரயித்து "ஸதாசார்ய லக்ஷண பூர்த்தியுள்ள இவரை ஆச்ரயிக்கப் பெற்றோமே!" என்று மகிழ்ச்சி கொண்டமை இந்த ச்லோகத்தில் ஒவ்வொரு விசேஷணத்தினாலும் ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டிருப்பதை நிரூபிக்கிறோங் காண்மின்;—

1. **ஸ்ரீசைலேசதயாபாத்ரம்** என்பது முதல் விசேஷணம். ராமாவதாரத்தில் சைலேசதயாபாத்ரமானவொரு வ்யக்தியை வணங்கிக்கெட்டேன். இப்போது ஸ்ரீசைலேசதயாபாத்ரமான வ்யக்தி விசேஷத்தை வணங்கி வாழ்கிறேன் என்கிறது. ராமாவதாரத்தில் வணங்கப்பட்ட சைலேசதயாபாத்ரமான வ்யக்தி யாரென்னில்; ஸுக்ரீவன். சைலமாவது ரிச்யமூக பர்வதம். அதற்கு ஈசர்—மதங்கமுனிவர். அவருடைய தயைக்குப் பாத்ரபூதன் ஸுக்ரீவன் என்பது ஸ்ரீராமாயணம் கிஷ்கிந்தா காண்டத்தில் பதினோராவது ஸர்க்கத்திலுள்ள கதையினால் ஸ்பஷ்டம். ஆயிரம் யானை பலங்கொண்டவனான **துந்துபி** யென்னுமரக்கன் எருமைக்கடா வடிவ மெடுத்துக் கிஷ்கிந்தைக்கு வந்து வாலியைச் சண்டைக்கழைக்க இருவர்க்கும் பிரபலமான போர்நடந்து, வாலியினால் துந்துபி சரீரம் முழுதும் மடியும்படி பிசையப்பட்டு அவ்வரக்கன் மரணமடைந்து தரையில் விழ, வாலி அவனுடைய வுடலை ஒரு யோசனை தூரம்போய் விழும்படி வீசியெறிய, அப்போது அவனது வாயிலிருந்து ரத்தத்துளிகள் காற்றினால் தள்ளுண்டு [சைலேசரான] மதங்கமாமுனிவரின் ஆச்ரமத்தில்போய்விழ, அதைக்கண்ட அம்முனிவர் மிகுந்த சீற்றங்கொண்டு தன் ஞானத்ருஷ்டியினால் இங்ஙனம் தீச்செயல் செய்தவன் வாலி யென்றுணர்ந்து ''பரிசுத்தமான எனது ஆச்ரமத்தை இவ்விதம் அபரிசுத்தமாக்கினவன் யாவனோ அவனும் அவனன்பர்களும் இவ்வாச்ரம பரிஸரங்களில் வந்தால் உடனே மரணமடையக்கடவர்கள்'' என்று சாபமிட்டு அச்சாபம் நடத்தைக்கு வருவதற்கு ஒருநாள் கெடுகொடுத் திருப்பதாகவும் சொல்ல, உடனே அவ்வனத்திலுள்ள [வாலியைச் சேர்ந்த]வானரர்களெல்லாரும் ஓடிச்சென்றனர். சாப பயத்தினால் வாலி அவ்விடம் வருவதற்கில்லாதபடியாயிற்று. அவனுடைய ஸம்பந்தமற்றவனான ஸுக்ரீவன் மாத்திரம் தனது அன்பர்களுடன் அவ்வாச்ரமத்தில் வாழ்ந்து வந்தனனாதலால் அவன் சைலேச தயாபாத்ரமாயினன். **''ஸுக்ரீவம் சரணம் கத:''** என்கிறபடியே அவனை வணங்கியிருந்த இராமன் பிறகு அவனோடே மனஸ்தாபப்பட நேர்ந்து விட்டது. அவ்விஷயம் கிஷ்கிந்தாகாண்டம் முப்பதாவது ஸர்க்கத்தில் விளங்கியதே. அதாவது—மாரிகாலம் முடிந்தபின்பும் ஸுக்ரீவன் சேனைகளைத் திரட்டிக்கொண்டு வராமற்போகவே பெருமாள் இளையோனை நோக்கி 'லக்ஷ்மணா! இன்னமும் ஸுக்ரீவன் என்னை அடியோடு மறந்து வாளாகிடக்கின்றனன்காண்; செய்ந்நன்றி மறந்த காதகனன்றோ ஸுக்ரீவன்; நீ உடனே அவனிடஞ்சென்று நான் சொன்னதாகச் சொல்லு; செய்ந்நன்றி மறந்த பாபிஷ்டன் புருஷர்களிற்கடையானவன்; அவன் மரணமடைந்தால் அவனது உடலை மாமிசந்தின்னும் ஜந்துக்களும் தின்னமாட்டா. லக்ஷ்மணா! என் பராக்ரமத்தை ஸுக்ரீவன் நன்றாக அறிந்திருந்தும் சிறிதும் அச்சமில்லாமல் கிடக்கிறானே; வாலி சென்றவழி அவனுக்கும் திறந்திருக்கிறதென்று அவனிடம் கூறு. அவனை உற்றார் நற்றவினரோடும் யமபுரமனுப்பச் சித்தமாயிருக்கிறேனென்று தெரிவி' என்று கூறியிருப்பதேயாம். **''ஸுக்ரீவம் நாதமிச்சதி''** என்றும் **''ஸுக்ரீவம் சரணம் கத:''** என்றும் ஈடுபட்டவிடத்திலே இப்படி மனஸ்தாபப்பட நேர்ந்துவிட்டதனால், முன்பு சைலேசதயாபாத்ர பூதனானவொருவனை வணங்கி வருந்தின குறைதீர இப்போது ஸ்ரீசைலேசதயாபாத்ர பூதரை வணங்கி வாழ்கின்றேனென்றதாயிற்று. திருமலையாழ்வாரென்கிற திருவாய்மொழிப்பிள்ளையின் இன்னருளுக்கு இலக்கான மாமுனிகளை வணங்குகின்றேனென்கை.

2. இனி இரண்டாவது விசேஷணம் தீபக்த்யாதி குணார்ணவம். ஸ்ரீராமனாக அவதரித்திருந்த அக்காலத்தில் ஸுக்ரீவன் காலிலே குனிந்ததும்போலவே லவணார்ணவத்தின் காலிலும் குனிந்தமை யுத்தகாண்ட ப்ரஸித்தம். ''ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி'' என்ற விபீஷணாழ்வானுடைய வாக்கின்படி லவணார்ணவத்தை நோக்கிச் சரணாகதி பண்ணியிருந்து அங்கும் மநஸ்தாபம் மிகுந்தது. அக்கடலரசன் முகங்காட்டிற்றிலனாக, மிகவும் சீறிச் சிவந்து ''சாபமாநய ஸௌமித்ரே!... ஸாகரம் சோஷயிஷ்யாமி'' (லக்ஷ்மணா! வில்லையும் கொடிய அம்புகளையும் கொண்டுவா; இதோ கடலை வெறுந்தரையாக்கி விடுகிறேன்) என்று கூறி நிக்ரஹத்திலேயன்றோ துணிந்து நின்றது. சரணாகதி பண்ணினவிடத்திலே இது தகுமோ? அப்படியான குறைதீர அந்த லவணார்ணவத்தைவிட்டு தீபக்த்யாதி குணார்ணவத்தை அடிபணிந்து வாழப் பார்க்கிறபடி. ஞானபக்தி விரக்திகளுக்குக் கடலான மாமுனிகளை வணங்குகின்றேனென்கை.

3. இனி மூன்றாவது விசேஷணம் யதீந்த்ரப்ரவணம் இப்போது ஸ்ரீரங்கநாதனாயிருக்கின்ற பெருமானே ''மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத்தரவினணையான்'' என்கிறபடியே திருவேங்கடமுடையானாகவும் நின்ற நிலையிலே எம்பெருமானார்க்கு [ஸ்ரீராமாநுஜர்க்கு] சிஷ்யனாயினன். ''அப்பனுக்குச் சங்காழியளித்தருளும் பெருமாள்'' என்று போற்றப்படுகின்ற ஸ்ரீராமாநுஜரிடம் திருமலையப்பன் திருவாழிதிருச்சங்கு பெற்றதனால் அந்த யதீந்த்ரரிடத்தில் சிஷ்யவ்ருத்திகொண்டிருந்தது ப்ரஸித்தம். ஆனால் அங்கு மநஸ்தாபமொன்றும் நேரவில்லையானாலும் இராமாநுச நூற்றந்தாதியில் ''தன்னையுற்றாட் செய்யுந் தன்மையினோர்'' என்கிற பாட்டைத் திருச்செவி சாத்தினபின்பு 'யதீந்த்ரரிடத்திலே சிஷ்யவ்ருத்தி செய்வதிற்காட்டிலும் யதீந்த்ரப்ரவணராானார் திறத்திலே சிஷ்யவ்ருத்தி செய்வதுதான் சிறந்ததென்று தோன்றிவிட்டது. அந்தப் பாசுரத்தில், தன்னையுற்றாட் செய்வதிற்காட்டிலும் தன்னையுற்றாட் செய்யுந்தன்மையினோர் மன்னுதாமரைத்தாள் தன்னையுற்று ஆட்செய்வாரே சிறந்தவரென்று எம்பெருமானார் திருவுள்ளம்பற்றியதாக வெளியிடப்பட்டுள்ளதன்றோ! அதனால் யதீந்த்ரப்ரவணரையிறைஞ்சுகின்றேனென்கிறதாயிற்று. மணவாள மாமுனிகளுக்கு யதீந்த்ரப்ரவணரென்ற திருநாமம் சிறப்பாகக் கிடைத்ததென்றுணர்க.

4. இனி ச்லோகத்தின் ஸமாப்தி *வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.* இராமனையும் கண்ணனையுமவதரித்த இரண்டவதாரங்களிலும் இரண்டு முனிகளிடத்திலே சிஷ்யவ்ருத்திசெய்திருந்தானெம்பெருமான். ராமாவதாரத்தில் விச்வாமித்ரமுனிவன் பக்கலிலும் க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபினிமுனிவன் பக்கலிலும் சிஷ்யவ்ருத்தி செய்திருந்து அவ்விருவரிடத்திலும் வெறுப்பேயாயிற்று எம்பெருமானுக்கு. எங்ஙனேயென்னில், விச்வாமித்திரர் ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடன் மிதிலையில் ஜனகசக்ரவர்த்தியினது வேள்விச்சாலையில் புகுந்தபின் கௌதமபுத்திரரும் ஜனகபுரோஹிதருமான சதாநந்தர் [பாலகாண்டம் 51ஆம் ஸர்க்கம் முதலாக] விச்வாமித்ரருடைய பழைய கதைகளைச் சொல்லத்தொடங்கி அவர் ரஜோகுண தமோ குணங்களின் வசப்பட்டுச் செய்த செயல்களையெல்லாம் சொல்லிவர, அதெல்லாம் கேட்ட இராமன் இப்படிப்பட்ட வொருவரையா நாம் ஆசாரியனாகக் கொண்

டோம்!' என்று வெறுத்திருக்கநேர்ந்தது. க்ருஷ்ணவதாரத்தில் அவந்திகாபுரியில் வாழ்ந்துவந்த ஸாந்தீபநிமுனிவரிடத்தில் அறுபத்துநான்கு கலைகளையும் பயின்ற கண்ணபிரான் ''ஆசார்யாய ப்ரியம் தநமாஹ்ருத்ய'' என்ற உபநிஷத்தின் கட்டளையிலே குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கநின்றவளவிலே அம்முனிவர் ''மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்'' என்கிறபடியே என்றைக்கோ ப்ரபாஸ தீர்த்தத்தில் விழுந்து மாண்டுபோன மகனை மீட்டுத்தர வேணுமென்று வேண்ட அப்படியே கொடுத்தனன். கண்ணபிரானை ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியென்று அறியாதவனல்லன் ஸாந்தீபநிமுனிவன். அறிந்துவைத்தும் மோக்ஷபுருஷார்த்தத்தை விரும்பாதே மகனை மீட்டுத்தருகையாகிற க்ஷுத்ர புருஷார்த்தத்தை விரும்பினபடியால் அவன் பக்கலிலும் வெறுப்பேயாயிருந்தது. இப்படி வெறுப்புக்கு இலக்கான இரண்டு முனிகளையும் விட்டு ஸமஸ்தகல்யாண குணக்கடலான ரம்யஜாமாத்ருமுனியை வணங்கி வாழ்கின்றேனென்றதாயிற்று.

இவ்வளவு அர்த்த விசேஷங்களைக் கொண்ட இந்த ச்லோகம் எம்பெருமான் தானே சொல்லியிருக்க வேண்டுமேயொழிய ஒரு மனுஷ்யனால் கவிசெய்திருக்க இயலாதன்றோ! எம்பெருமானது ஹ்ருதயந்தன்னில் உறையும் விஷயங்களன்றோ இவை. இவற்றை ஏறிட்டுக்கொள்ளவும் முடியாதே பிறரொருவர்க்கு ஆகவே இந்தத் தனியன் தெய்வவாக்கே என்பது திண்ணமாயிற்று.

**108 சொன்னால் விரோதமிது:—** திருவாய்மொழியில் மூன்றாம் பத்தில் ஒன்பதாம் திருவாய்மொழியின் பாசுரத் தொடக்கமிது. பொருளீட்டும் பொருட்டு க்ஷுத்ர ப்ரபுக்களைக் குறித்துக் கவிபாடுகின்ற சில பண்டிதர்களை விளித்து அவர்களுக்கு ஹிதோபதேசம் பண்ணும் பதிகமிது. தன் பக்கலிலே விபரீத புத்தியைப் பண்ணி நிற்கிற பாபிஷ்டனான ராவணனைக் குறித்துப் பிராட்டி *விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:, தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி* இத்யாதிகளாலே ஹிதோபதேசம் பண்ணினாப் போலவும், விபீஷணாழ்வான் தன்னை திரஸ்கரித்த அவ்விராவணனையே குறித்து *ந நச்யந்தம் உபேக்ஷயம் ப்ரதீப்தம் சரணம் யதா* இத்யாதிகளாலே ஹிதோபதேசம் பண்ணினாப் போலவும் ப்ரஹ்லாதாழ்வான் தன்னைப் பலவிதமாக நலிகின்ற தந்தையான இரணியனை நோக்கி *ஸர்வ பூதாத்மகே தாத! ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ர கதா குத:?* இத்யாதிகளால் ஹிதோபதேசம் பண்ணினாப் போலவும் ஆழ்வார் ஸம்ஸாரிகளின் அநர்த்தம் பொறுக்கமாட்டாத கருணையினாலே ஹிதோபதேசம் பண்ணுகிறாராயிற்று. இப்பதிகத்தின் ஸாரமாகத் திருமங்கையாழ்வார் தமது திருமொழியில் (1-1-7) ''இற்பிறப்பறியீர் இவரவரென்னீர் இன்னதோர் தன்மையென்றுணரீர் கற்பகம் புலவர் களைகணென்றுலகில் கண்டவா தொண்டரைப் பாடும் சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின் சூழ்புனல் குடந்தையே தொழுமின் நற்பொருள் காண்மின் பாடி நீருய்ம்மின் நாராயணாவென்னும் நாமம்* என்கிற பாசுரம் அருளிச்செய்தார். இங்கு மகுடமாகக் கொண்ட திருவாய்மொழிப் பாசுரத்தில் 'சொன்னால் விரோதமிது' என்பதற்குப் பல கருத்துக்களுண்டு.

முக்கியமான கருத்தொன்று கேளீர். அரிய பெரிய சாஸ்த்ரார்த்தங்களைப் பிறர்க்கு உபதேசிக்கவேணுமானல் அவர்களுடைய ப்ரார்த்தனைகளைக் கொண்டல்லது உபதேசிக்கலாகாது என்று சாஸ்த்ர வரம்புள்ளது. (அதாவது) ''பரீக்ஷ்யலோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத்.........தத் விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத்.........''இத்யாதிகளான கட்டளைகள் உள்ளன. அதை மீறி நான் உபதேசிப்பது சாஸ்த்ர விரோதமாகும். ஆனாலும் உங்கள் துர்க்கதியைக் கண்டு ஸஹித்திருக்கமாட்டாமையாலே உபதேசிக்கிறேன் என்பது ''ஆகிலும் சொல்லுவன்'' என்பதன் பொருள். இங்கு ''நண்ணுதார் மெய்யில் ஊனுசை நிர்வேதத்தோடே'' இத்யாத்யாசார்ய ஹ்ருதயசூர்ணை உணரத்தக்கது. அதை மேலே 'ந' என்னும் எழுத்தில் விவரிப்போம்.

**109. சோம்பரை உகத்திபோலும் சூழ்புனல் அரங்கத்தானே!** தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருமாலையில் 38ஆம் பாசுரத்தின் ஈற்றடி இது. ''ரங்கநாதா! நீ சோம்பேறிகளையே உகக்கிறுய்!'' என்பது இவ்வடியின் பொருள். இப்பாசுரத்தை ஸந்நிதிகளிலும் திருமாளிகைகளிலும் ஸேவிக்கும்போது எங்கும் இரட்டித்துச் சேவிப்பது சம்பிரதாயம். இரட்டிக்கவேண்டிய விசேஷார்த்தம் இப்பாசுரத்தில் என்ன உள்ளது? என்று ஆராயவேண்டும். பாசுரத்தைப் பூர்த்தியாகக் கேண்மின். ''மேம்பொருள் போகவிட்டு மெய்ம்மையை மிகவுணர்ந்து ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனடக்கி காம்பறத்தலை சிரைத்து உன்கடைத்தலை யிருந்து வாழும் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனல் அரங்கத்தானே'' என்பதாம். இப்பாட்டின் பதப் பொருளாவது; ''காவிரி சூழ்ந்த கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! ப்ராக்ருத ஜநங்கள் விரும்புகிற லௌகிக பதார்த்தங்களை வாஸனையோடு விட்டிட்டு ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியறிந்து ஸ்வரூபாநுரூபமான ஸமாசாரங்களையும் தெரிந்து கொண்டு ஐந்து இந்த்ரியங்களையும் விஷயாந்தரங்களில் போகவொட்டாமல் தம்முள்ளே பதிய அடக்கி, அடியோடே தன் தலையிலுள்ள சுமையைத் தொலைத்து உனது திருவாசலிலே காவலாளராக வாஸஞ்செய்து உஜ்ஜீவிக்கின்ற, (தம்முடைய ஹிதத்தில்) சோம்பியிருக்குமவர்களை உகக்குமவன் அல்லையோ நீ?'' என்பதாம். உலகில் சோம்பர் இருவகைப்படுவர்; கெடும் சோம்பர் என்றும் வாழும் சோம்பர் என்றும். கெடுஞ் சோம்பராவார் ஈச்வரனில்லை, சாஸ்த்ரமில்லை, பரலோகமில்லை என்றுற்போலே எல்லாவற்றையும் இல்லை செய்து விஹிதகர்மங்களை அநுஷ்டியாமல் தோன்றிற்றுச் செய்து சோம்பேறிகளாய்த் திரிவார். வாழுஞ் சோம்பராவார்—சாஸ்த்ரத்தில் நாஸ்திகராய்க் கர்த்தவ்யங்களை விடுகையன்றிக்கே ஆஸ்திக சிகாமணிகளாய் ஸித்தோபாயமான எம்பெருமானை ஸ்வீகரித்து அவ்வெம்பெருமானுடைய அநுபவமே காலக்ஷேபமாய்த் தமது ஹிதத்தைத் தாமே தேடிக்கொள்வதில் சோம்பியிருப்பவர்கள். இந்த வாழுஞ் சோம்பரின் படியை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் (ச்லோ 84) *நித்யம் காம்யம் பரமபி கதிசித்* என்று தொடங்கும் ச்லோகத்தில் *விதததி விஹிதம்* என்று ஸாதித்து உடனே *ஸ்ரீரங்கேந்தோ! விதததி ந ச தே* என்று பணித்தருளினர். 'எல்லாவற்றையும் செய்கிறுர்கள்' என்று முன்னம் ஸாதித்துப் பின்னை ''ஒன்றையும் அவர்கள் செய்வதில்லை'' என்று தலைக்கட்டியுள்ளார். இதன் மருமமானபொருளை நமது ஸ்ரீரங்கராஜஸ்

தவ வ்யாக்யானத்திற் கண்டுகொள்வது. இவ்வாசிரியர் தாமே அந்த ஸ்தவத்தின் பூர்வ சதகத்தில் "ஸ்ரீரங்கபாலந கர்மடா:" என்றொரு அருமையான ப்ரயோகம் செய்துள்ளார். குளத்தைக் காப்பதிற் காட்டிலும் கோயிலைக் காப்பதுதான் சிறந்ததென்று தெளிவித்தபடி. "ஜாத்யாச்ரம தீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போலே அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்" என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையின் வ்யாக்யானம் ஸேவிப்பது.

**110. சௌநக பகவானும் திருமங்கையாழ்வாரும்:—** பெரியவாச்சான்பிள்ளையருளிச் செய்த திருநெடுந்தாண்டக வியாக்கியான அவதாரிகையில் அற்புதமான வாக்யச்ரேணி கேண்மின்;—"சுகாதிகளும் முதலாழ்வார்களும் பரத்வத்திலே ஊன்றியிருப்பர்கள். ஸநகாதிகளும் திருமழிசைப்பிரானும் அந்தராத்மதையிலே ஊன்றியிருப்பர்கள். பராசரபாராசர்யாதிகளும் நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் ஆண்டாளும் க்ருஷ்ணாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள். வால்மீகி பகவானும் குலசேகரப் பெருமாளும் ராமாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள். நாரதபகவானும் தொண்டரடிப்பொடியாழ்வாரும் திருப்பாணாழ்வாரும் திருவரங்கம் பெரிய கோயிலிலே ஊன்றியிருப்பர்கள். சௌநகபகவானும் திருமங்கையாழ்வாரும் அர்ச்சாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள்" என்பதாம். முதலாழ்வார்கள் முதலானோர்க்கு பரத்வத்தில் மட்டுந்தானோ ஊற்றம்? விபவாவதார அர்ச்சாவதாரங்களில் ஊற்றமில்லையா என்று கேட்க வேண்டா. எல்லார்க்கும் எல்லாவற்றிலும் ப்ராவண்யமிருக்கச் செய்தேயும் ஒரொன்றிலே ஊற்றமாக வருளிச் செய்திருப்பது ப்ராசுர்யத்தைப் பற்றவாம். ஸ்ரீவசநபூஷணத்தில், "இப்படி சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற" என்றுள்ள சூர்ணையை இங்கு நிதர்சனமாகக் கொள்ளலாம். சௌநக பகவான் "தாம் அர்ச்சயேத் தாம் ப்ரணமேத்" என்று அர்ச்சையைப் பற்றச் சொல்லியிருக்கையாலே அவரையும் திருமங்கையாழ்வாரையும் சேர்த்து அருளிச் செய்தாராயிற்று. மற்றை யாழ்வார்களிற்காட்டில் திருமங்கையாழ்வார்க்கு அர்ச்சாவதாரத்தில் அதிசயித ப்ராவண்யமென்பது எண்பத்தாறு திவ்யதேசங்களைப் பாடியவர் இவரொருவரே என்பது கொண்டு அறிய வெளிது.

**111. சௌர்ய வீர்ய பராக்ரமங்கள்:—** உலகில் வலிமிக்கவர்களைச் சூரர் என்றும் வீரர் என்றும் பராக்ரமசாலி யென்றும் வழங்குவர். இவ்வழக்கு எம்பெருமான் பக்கலிலும் உண்டு. "ஜய ஜய மஹா வீர!" என்றும் "அஸஹாய சூர!" என்றும் "அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்" என்றுமுள்ள ப்ரமாணங்களினால் இதனையுணரலாம். எம்பெருமானார் சரணாகதிகத்யத்தில் குணசூர்ணையில் காருண்ய வாத்ஸல்யாதிகளோடுகூட சௌர்ய வீர்ய பராக்ரமங்களையும் சேர்த்தருளிச் செய்துள்ளார். இம்மூன்றுக்கும் பொருளில் வாசியுண்டு. (அதாவது) "எத்தனை போர்வீரர்களெதிரிட்டாலும் அவர்களை அநாயாஸமாகப் பொடிபடுத்துவேன்" என்று சொல்லுமாற்றல் சௌர்யம். சத்ருக்களின் ஸேனைகளிலே புகுந்து அப்படியே நிறைவேற்றுகை வீர்யம். போர் செய்யும்போது தனக்கு ஒரு விதமான க்ஷதியுமில்லாமே பரிபூர்ண வெற்றியோடே திரும்புமாற்றல் பராக்ரமம். எம்பெருமானுக்கே அஸாதாரண க்ருத்யமான ஆச்ரிதரக்ஷணத்திற்கு இவை இன்றியமையாதன வாதலால் இவையும் கல்யாண குணங்களோடு சேர்த்துப் படிக்கப்பட்டன. ஸ்ரீராமாயணத்தில் "தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்" என்கிற ச்லோகம் (கரதூஷண வத ப்ரகரணத்திலுள்ளது) ப்ரஸித்தம். அங்கு "சத்ருஹந்தாரம்" என்று சொல்லி உடனே "மஹர்ஷீணாம் ஸுகாவஹம்" என்றமையால் ஸாதுபரித்ராணத்திற்கு சௌர்ய வீர்யாதிகள் மிகவும் ஆவச்யகங்களென்றுணரலாம்.

112. **ஞானத்தில் தம்பேச்சு; ப்ரேமத்தில் பெண்பேச்சு.** இது ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில் ஒரு சூர்ணிகை. ஆழ்வார் தாமான தன்மையில் பேசுவதோடு நில்லாமல் பெண்மையை யடைந்து தலைமகள் பேச்சாகவும், தாய் பேச்சாகவும் தோழி பேச்சாகவும் பேசுவன காண்கிறோம். ஆண்களில் தலைவரான ஆழ்வார்க்குப் பெண்மை எங்ஙனே வந்தது என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக "வித்யை தாயாகப் பெற்று" என்கிற பெரிய சூர்ணையினுல் சேதநர்க்குப் பெண்மையே இயற்கையானதென்று வெகு அற்புதமாக நிரூபித்துள்ளார். இந்த சூர்ணிகை அந்த உபபத்தியைச் சுருக்கமாகத் தெரிவிக்கின்றது. நம்மாழ்வார் ஜ்ஞாந தசையிலே தாமான தன்மையில் நின்றுபேசுவர். ப்ரேமதசையில் அவஸ்தாந்தராபந்நராய் பெண்பேச்சாகப் பேசுவர் என்பது இந்த சூர்ணையின் தாற்பரியம். இதில் ஜ்ஞாநதசைக்கு எதிராகச் சொன்ன தசை அஜ்ஞான தசையாகும். ருஷிகளுக்கு ஞான தசைமட்டுமே. ஆழ்வார்கட்கு ப்ரேம தசையே அதிகம்.

113. **ஞானங்கனிந்த நலங்கொண்டு:—** இராமாநுச நூற்றந்தாதியின் பாசுரமிது. இப்பாசுரத்தைப் பூர்த்தியாகக் கேண்மின்;—

"ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு
வானம்கொடுப்பது மாதவன், வல்வினையேன் மனத்தில்
ஈனங்கடிந்த விராமாநுசன் தன்னைமெய் தினர்க்கத்
தானங் கொடுப்பது தன்தகவென்னும் சரண்கொடுத்தே".

இப்பாசுரத்தின் ப்ரமேயமென்ன வென்றுல் சேதனர்களுக்கு எம்பெருமான் மோக்ஷமளிப்பதானது அவர்களை மிகவும் சிரமப்படுத்தியேயாம். எம்பெருமானுர் மோக்ஷமளிப்பதானது க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யத்வ ப்ரஸித்திக்குச்சேர— என்பதாம். இதனுல் எம்பெருமானுருக்கும் மோக்ஷமளிக்கும் அதிகாரம் உண்டென்பது விளங்கும். இதனை வேதாந்திகள் எங்ஙனே நிர்வஹிப்பர்கள் என்றுல், பிராட்டியிற்காட்டிலும் விஞ்சின காருண்ய வாத்ஸல்யாதி குணங்களையுடையரான எம்பெருமானுர் தண்டதரத்வஸம்வலிதமான காருண்ய வாத்ஸல்யாதிகளையுடையனுன எம்பெருமான் பக்கலிலே மன்றுடி தண்டதரத்வ சக்தியை விமுகர்களான ஸம்ஸாரிகள் பக்கலிலே செலுத்தவும், காருண்ய வாத்ஸல்யாதிகளை அபிமுகர்களான பக்தர்களின் பக்கலிலே செலுத்தவும் செய்து முக்திஸாம்ராஜ்யமளிக்கச் செய்தருள்வர், என்று நிர்வஹிப்பார்களாயிற்று. இவ்வர்த்தத்தை மணவாளமாமுனிகள் தாம் அருளிச்செய்த யதிராஜ விம்சதியில்;—

"ச்ருத்யக்ரவேத்யநிஜதிவ்ய குணஸ்வரூப:
ப்ரத்யக்ஷதாம் உபகதஸ் த்விஹ ரங்கராஜ:,
வச்யஸ் ஸதா பவதி தே யதிராஜ! தஸ்மாத்
சக்த: ஸ்வகீய ஜநபாபவிமோசநே த்வம்".

என்ற சுலோகத்தினுல் தெளிவித்தருளினுர். புருஷகாரக்ருத்யைகப்ரவணையான பிராட்டி மோக்ஷமளிப்பதாகவும் எங்கேனும் சொல்லப்பட்டிருந்தால் அதற்கும் இங்ஙனே யாயிற்று நிர்வாஹம்.

# ஸ்ரீகாஞ்சியில் தர்மோபநயநம்



ஸ்ரீமதித்யாதி. உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீ **காதி ஜகத்குரு ஸ்வாமியின் நூற்றாண்டு விழா** சென்ற பங்குனி மாதம் முதல் நமது பாரத நாடெங்கும் கொண்டாடப்பட்டு வருவது அனைவருமறிந்ததே. இதற்காகப் பெரிய ஸமிதியொன்று நிறுவப்பட்டிருக்கிறது. அதன் ஆதரவில் நேற்று வைகாசி விசாகத்தன்று (13—6—73) ஏழு ஸ்ரீ வைஷ்ணவச் சிறுவர்களுக்கு ஸ்ரீகாஞ்சி நம்பிள்ளை ஸன்னிதியில் தர்மோபநயநம் நடத்தப்பட்டது. ஸ்ரீமான் உ.வே. காதி ஸ்ரீநிவாஸாசாரியரும், ஸ்ரீமான் உ.வே. K.K A. துரைஸாமி ஐயங்காரும் முன்னின்று இப்பெரிய தர்ம காரியத்தைச் சிறப்பாக நடத்திவைத்தார்கள். அச்சமயத்தில் எடுத்த புகைப்படத்தை ப்ளாக்செய்வித்து இங்கு ப்ரசுரிக்க உதவி செய்தவர் ஸ்ரீமான் உ. வே. P. V. ராஜன் பம்பாய்.

# ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம்

தேவப்பெருமாள் ஸன்னிதியிலுள்ள நம்மாழ்வார் ஸன்னிதியின் பரம்பரையாதீன மிராசுதாரரான ஸ்ரீமான் உ. வே. ஸ்ரீநிவாஸவரதாசாரிய ஸ்வாமிக்கு நேற்று ஐப்பசி ரேவதியன்று (8—11—73) ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் இவரது திருமாளிகையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. இவர் இளமையில் ஆங்கிலம் கற்றிருந்தாலும் பிறகு வைதிகக் கல்விகள் பயின்று ஸம்ப்ரதாயஜ்ஞர்களில் பரிகணிதராக விளங்கிவருகிறார். இவர்க்குப் பல்லாண்டு பாடுகிறோம்.

(பத்ராதிபர்)

# பெரியாரின் பரமபத ப்ராப்தி

ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி சடகோபாசார்ய ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் மிக ப்ரஸித்தர். இவர் நிகழும் கார்த்திகைமீ 4உ திங்கட்கிழமையன்று திருநாடலங்கரித்தார் என்பது மிக்க சோகத்துடன் தெரிவிக்கலாகிறது. இவர்க்கு எண்பது திருநக்ஷத்ரம் நிரம்பியுள்ளது. காவ்ய நாடகங்களும் ஸித்தாந்தகௌமுதியும் வாசித்து ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்தி படைத்தவர். திவ்ய ப்ரபந்தமதிகரித்து நெடுநாள் தேவப்பெருமாளுக்கு அத்யாபக கைங்கர்யம் செய்தவர். நமது வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் ஸ்ரீமதுபயவே மாம்பள்ளம் ஸ்ரீ ஸுதர்சனசார்ய ஸ்வாமியிடத்தில் வேதாத்யயனம் செய்து 40 வருஷம் வேதபாராயணம் செய்தவர். இப்பெருமைகளுக்கெல்லாம் சிகரமாக தேவப்பெருமாள் மணவாளமாமுனி ஸன்னிதியில் நாற்பதினாயிரம் ரூபாய் செலவில் பெரிய திருமண்டபம் நிர்மாணம் செய்வித்தவர். இவர் பத்து வருஷம் நம்பிள்ளை ஸன்னிதியில் திருவாராதனம் செய்திருக்கிறார். இரண்டொரு வருட காலமாக நெய்வேலியில் தமது அத்விதீய திருக்குமாரரிடம் இருந்துவந்தவிவர் நேற்று (19—11—73) அன்று திருநாடலங்கரித்துவிட்டார். இவர் வேதாத்யயனத்தில் எனக்கு ஸப்ரஹ்மசாரியாயிருந்தவர். இவருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்வாரில்லை.

(பத்ராதிபர்.)

# புதுடில்லியில் மணவாளமாமுனிகளின் உத்ஸவம்

புதுடில்லி லோதி ரோடில் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமன் நாராயண ராமானுஜ ஜீயர் ஸ்வாமியால் ஸ்தாபிக்கப்பட்ட, லோகக்ஷேமராகவ ஸ்வாமி ஸன்னிதியில் எழுந்தருளியுள்ள மணவாள மாமுனிகளுக்கு வழக்கம்போல் இந்த வருஷத்திலும் திருவவதார மஹோத்ஸவம் சிறப்பாக நடைபெற்றது. நவம்பர் 18உ சனிக்கிழமை சாற்றுமுறை பூர்த்தியாகி நாலாயிர திவ்யப்ரபந்தம், ருக்வேதம், யஜுர்வேதம் சாமவேதங்களும்பாராயணம் பூர்த்தியாகியது. மணவாளமாமுனிகட்கு தினமும் காலையிலும், மாலையிலும் இராமபிரானிடமிருந்து மாலைகள், பரிவட்டம். ஸ்ரீ சடகோப மரியாதைகளும் ஸ்ரீ பாஞ்சராத்ர ஆகமவிதி பிரகாரம் செய்துவிக்கப்பட்டது. ஸ்ரீ வில்லிபுத்தூரிலிருந்து வந்திருந்த ஸ்ரீ உ வே. விஞ்சிமூர் ஸ்ரீனிவாஸாசாரியர் ஸ்வாமி பாகவத உபன்யாசமும், ஸ்ரீமணவாளமாமுனி அவதார வைபவம் பற்றியும் சிறப்பாகவும் அரிய பல ரஹஸ்யார்த்தங்களை விரிவாகவும் எடுத்துரைத்தார். புதுடில்லியில் உள்ள தமிழ்நாட்டு ஆஸ்திகர்கள் அனைவரும் தினமும் திரளாக வந்திருந்து உபன்யாஸத்தைக் கேட்டு மகிழ்வுற்றனர். சாற்றுமுறையன்று சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் உயர்திரு A. அழகிரிசாமி அவர்கள் விஜயம் செய்து உத்ஸவத்தைச் சிறப்பித்தது குறிப்பிடத்தக்கது.

A. K. க்ருஷ்ணசாமி ஐயங்கார்,
New Delhi.

# சேரங்குளம் ஸ்வாமியின்
# ஷஷ்ட்யப்தபூர்த்தி நிகழ்ச்சி விவரம்

(அனுப்பியவர்: ஸ்ரீமான் உ.வே. ஆழ்வார்சாமி ஐயங்கார், சேரங்குளம்)



சென்ற 22-11-73 ஐப்பசிமீ 6வ ஸ்ரீமான் பட்டுராஜம் என்கிற பெரிய பண்ணை K.R. ராஜகோபாலய்யங்கார் ஸ்வாமியின் (ஸ்ரீ மன்னார்குடி ராஜகோபால ஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தா) ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் நடந்தேறியது. 21-10-73 ஞாயிற்றுக்கிழமை யன்று காலை 7 மணிக்கு 40 அத்யாபகர்களைக்கொண்டு திவ்யப்ரபந்த ஸேவையும் வேதம் வல்லார்களைக் கொண்டு (இருபது ஸ்ரீ வைஷ்ணவர்கள்) ருக் யஜுஸ் ஸாமவேத பாராயணமும், ஸ்ரீ ராமாயண பாராயணமும் தொடங்கப்பட்டு இரு வேளைகளிலும் நடைபெற்று திங்கட்கிழமை (22—10—73) காலை 6 மணிக்கு க்ரமமாகச் சாற்றுமுறை பூர்த்தியாயிற்று. பின்பு உதக சாந்தி புண்யாஹவாசன ஜபங்கள் காலை 7 மணிக்கு ஆரம்பித்து 9 மணியளவில் வைதிக கார்யங்கள் நடந்தேறின. இந்த ஷஷ்டியப்தபூர்த்தி வைபவத்தை உத்தேசித்து இந்துமத பரிபாலன ஆட்சியாளர் அவர்கள் உத்தரவின்படி தமிழ்நாட்டிலுள்ள திவ்ய தேசங்களனைத்திலிருந்தும் அவற்றின் நிர்வாஹ அதிகாரிகளின் கடிதங்களுடன் பகவத் ப்ரஸாதமாக மாலை பரிவட்டம் வகைகள் வந்து சேர்ந்து சேரங்குளம் ஸ்ரீநிவாஸப் பெருமாள் ஸன்னிதியில் ஒன்றுசேர்ந்து ஸ்ரீ ராஜகோபாலன் தேவஸ்தான கஜராஜன் பேரில் சத்ர சாமராதிகளுடன் ஸ்ரீ ராஜகோபாலன் ப்ரஸாதத்தோடு எல்லா திவ்யதேச ப்ரஸாதங்களும் மேளதாள ஸன்னிதி விருதுகளுடன் திருவீதி வலம் வந்து அநுக்ரஹித்தது கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. பிறகு 9 மணிக்குமேல் 9-30க்குள் திருமங்கல்யதாரணம் ஆனதும் ஸ்ரீ ராஜகோபாலன் ஸன்னிதி ப்ரஸாதமாகச் சிறந்த சாதராவும் மாலைகளும் ப்ரஸாதங்களும் தம்பதிகளுக்கு அளிக்கப்பட்டும், மற்று எல்லா திவ்ய தேசங்களின் திருநாமமும் எம்பெருமான்களது திருநாமத்தோடு அருளிப்பாடிட்டு மாலை பரிவட்டங்களும் வழங்கப்பட்டன.

ஸ்ரீ வானமாமலை, திருக்குறுங்குடிபோன்ற ஜீயர் ஸ்வாமிகளிடமிருந்துவந்த பட்டுப் பரிவட்டப்ரஸாதங்களும், பந்துவர்க்கங்களின் பஹுமானங்களும் வழங்கப்பட்டன. ஸ்ரீவானமாமலை, திருக்குறுங்குடி, ஸ்ரீபெரும்பூதூர், ஸ்ரீ அஹோபிலமடம், ஸ்ரீ ஆண்டவன் ஸன்னிதி யதிவரர்களுடைய ஸ்ரீமுகங்கள் க்ருஹஸ்தாச்ரம ஆசார்ய புருஷர்களது ஸ்ரீ முகங்கள், காழியூர் ஜோதிஷம் ஸ்ரீநிவாஸாசார்யருடையதுமுட்பட, ஸதஸ்ஸில் படிக்கப்பட்டது. தமிழக மந்திரிகள், கவர்னர், இவர்களது



வாழ்த்துரைகளும் படிக்கப்பட்டது ஷை வைபவத்திற்கு மன்னைநகர் ப்ரமுகர்களும் தேவஸ்தாந தர்மகர்த்தாக்களை நிர்வாக அதிகாரிகள், எல்லோரும் குடும்பத்துடன் வந்திருந்து சிறப்பித்தனர். ஷை வைபவத்தில் கலந்துகொண்டு ப்ரவசன பாராயணங்கள் செய்த ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் வைதிகர்களுக்கும் ஸதஸ்ஸில் ஸம்பாவனைகளும், ஆழ்வார் ஆசார்யர்கள் திவ்யதேச எம்பெருமான்களது ஸம்பாவனைகளும் க்ரமமாகச் செய்யப்பட்டது. தனித்தனியே இரண்டு திருமாளிகைகளில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும், மற்றவர்களுக்கும் விசேஷமாகத ததீயாராதனங்கள் நடந்தேறி ஆசீர்வாதமும் நடந்து மங்கள இசையுடன் ஷை ஷஷ்ட்யப்த சுபமுகூர்த்தம் இனிது பூர்த்தியடைந்தது.

